ஸ்ரீ 

ஸ்ரீராமஜெயம்.

காருடபுராணமென்று வழங்குகிற

# ஸ்ரீ கருடபுராணவசனம்.

இஃது.

லெத்தகிராப் சித்திரபடங்கள் ஆபிதிகபடி

நூதனமாகச்செய்து.

உமையாள்புரம்

வித்வான்

ம-ா-ா-ஸ்ரீ, சங்கராசாரியாரவர்கள்

உதவிகொண்டு.

கவித்தலம்.

ஸ்ரீயாந் துரைசாமிமூப்பனாரவர்

மொழிபெயர்க்கப்பட்ட

பிரதிக்கிணங்க.

காஞ்சிபுரம்.

ம-ா-ா-ஸ்ரீ, நமசிவாயமுதலியாரவர்களால்.

உதவிகொண்டு.

ப. குப்புசாமிமுதலியார்

அவர்களது.

சென்னை - சூளை.

தொண்டைமண்டலம் அச்சேந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1888.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# அறிவிப்பு.

—:(*):—

இந்த ஸ்ரீகருடபுராணம் வேண்டியவர்கள் திருவிடைமருதூர் ம-ள-ள-ஸ்ரீ, ஜவுளிவியாபாரம் செய்யும் ந-வைத்திலிங்கப்பிள்ளையிடத்திலும் ரிகாபு - தொப்புக்கடை ம-ள-ள-ஸ்ரீ குப்புசாமிச்செட்டியாரிடத்திலும் சென்னை சூளை அவதானப்பாப்பையா வீதியில் 2-வது நெம்பருள்ள வீட்டிலிருக்கும் ப-குப்புசாமிமுதலியாரிடத்தில் பலவித தமிழ், தெலுங்கு, முதலிய புஸ்தகங்கள் விற்பனை செய்து வருவதால் தேவையுள்ளவர்கள் மேற்படி யாரிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

பத்துபுஸ்தகம், மொத்தமாய் வாங்கினால் ஒரு புஸ்தகம் கமீஷன் கொடுக்கப்படும்.

கித்தான்பவுண்டு விலை—ரூபா - க.
அட்டபவுண்டு விலை—அணா - ௰௨.

இப்படிக்கு,

☞ ப-குப்புசாமிமுதலியார்

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

ஸ்ரீமந்நிகமாந்த குரவே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம



# ஸ்ரீகருடபுராண சாரசங்கிரஹம்.



அகிலமங்களகுண சொரூபனாகிய ஸ்ரீசர்வேசன் கருடபகவானுக்குத் திருவாய்மலர்ந்தருளிய இப்புராணம், பின்னர்ச் சூதமாமுனிவரால் நைமிசாரணிய வாசிகளுக்குச் சொல்லப்பட்டது. ஸ்ரீ கருடபகவான் கேட்டமையால் ஸ்ரீ கருடபுராணமென்னும் பெயர்பெற்றது. ஜீவனிறக்கும் விதத்தையும், இறந்தவுடனே வாயுசரீரம்பெற்று யமதூதர்களோடு யமலோகஞ்சார்ந்து, கணப்பொழுதில் மீண்டு. சவத்தின் அருகேவந்து, இம்மையை யடைதலையும், கிருத்தியஞ்செய்யவேண்டிய விதத்தையும், பத்துநாட் பிண்டங்களால் ஜீவன் சரீரம்பெறுதலையும், பதின்மூன்றாநாள் யமதூதர் பிண்டசரீரம்பெற்ற ஜீவனைப் பாசத்தால் பிணித்து நாளொன்றுக்கு இருநூற்று நாற்பத்தேழு காத வழிதூரம் ஓராண்டுவரையிலும் நடத்திச் செல்லுதலையும், பூலோகத்துக்கும் யமபுரிக்கும் இடையிலுள்ள எண்பத்து நான்காயிர காத வழியில் அசிபத்திரவனம் அதாவது கூரியபோன்ற இலைகளுடையவனமும், உருக்கிவிட்ட செம்புபோலக் காந்தும் இடமும், அதிக உஷ்ணமும். குளிருமுள்ள இடங்களும் இருளுள்ள இடமும்; சிலாவருடமுடைய இடமும் இருத்தலையும், சீயாலும் இரத்தத்தாலும் நிறைந்து பாபிகளுக்கும் அப்பாபிகளை ஊறுசெய்யப் பலவகைச்ஜந்துக்களுக்கும் ஸ்தானமாய் வைதரணிநதி யிருத்தலையும், யாமியம், சௌரி, கந்தருவநகரம், குரூரம் கிரௌஞ்சம், விசித்திரம். பஹ்வாபதம், துக்கதம், நாநாக்கிரந்தம், சுதப்தம், சீதாப்ரம் என்ற பட்டணங்களில் யமதூதர்கள் பால் ஜீவன் சிறிதுபொழுது தங்கி மாசிக பிண்டங்களை யுண்ணுதலையும், மேற்சொன்னவற்றில் விசித்திரம் என்றநகரம்

சார்ந்து ஊனஷாண்மாசிக பிண்டத்தையுண்டு, ஏழாமாசிகபிண்டத்தை 'புண்ணுங்காலே சிலபிசாசங்கள்வந்து அப்பிண்டத்தைக் கவர்ந்துகொள்ளுதலையும், ஜீவன் யமபுரிக்கருகில் சாரலும், பிண்டசரீரம் நீங்கி அங்குஷ்டப் பிரமாணமாய் ஒரு வன்னிமரத்தில் சற்றுதங்கிக் கருமத்தாலாகிய சரீரம்பெற்று யமன் முன்புபோதலையும் யமபுரியின் தன்மையையும் யமனுடைய அரண்மனையும் யமன்வீற்றிருக்கின்ற மண்டபமும் சித்திரகுப்தன் அரண்மனையும் மகாரோகங்களின் கிருகங்களும் நரகங்களின் பெயரும், ஆகிய இவற்றின் பெற்றிமையையும், பாபஞ்செய்த ஜீவர் உலக்கையால் மொத்துண்டும், ஆயுதங்களால் சிதைக்கப்பட்டும் சுரிகையால் சீவப்பட்டும் செக்கால் அரைக்கப்பட்டும் நெருப்பில் வாட்டப்பட்டும் செம்பினால் செய்யப்பட்டுத்தப்தமாயிருக்கின்ற ஆண்பாவை பெண்பாவைகளோடு சேர்க்கப்பட்டும் கரும்பைப்போல ஆலையில் கொடுக்கப்படும் நரகங்களில் தள்ளி அழுந்தப்படும் துன்பப்படுதலையும் இன்னபாபம் செய்தவன் இன்னசன்மமடைகின்றான் என்பதையும் இன்னபாபஞ்செய்தவன் நரகம் அநுபவித்து இன்னகுறிப்போடு பிறப்பான் என்பதையும் இன்னதீவினையால் கொடிதாகிய பிரேதசன்மம்வரும் என்பதையும் நித்தியசிராத்தமும் வருடசிராத்தமும் செய்யவேண்டிய விதியையும் கருமஞ்செய்யாவிடின் மரித்தஜீவன் துன்பப்பட்டுப் பிரேதசன்மமடைந்து குலநாசம் செய்தலையும் கருமஞ்செய்யப்பட்டால் ஜீவன் இனிதாய்ச்சென்று இன்புற்றுச் சுவர்க்கவாசஞ்செய்து குலத்தோரை ஆசீர்வதித்தலையும், நல்வினை செய்த ஜீவன் உத்தம உலகு அடைதலையும் ஜீவன் நல்லுலகடைய ஏதுவாகிய பூதானம் சொர்ணதானம் - கோதானம் - பருத்தித்தானம் சய்யாதானம் இரும்புத்தானம் திலதானம் தீபதானம் உப்புத்தானம்-குடதானம் பததானம் விருஷோற்சர்க்கம் நாராயணபலி முதலியவை செய்யவேண்டிய விதியையும் - பிறத்தலுக்கும் இறத்தலுக்கும் - ஆசௌசமுள்ள விதத்தையும் துன்மரணம் அடைந்தவனுக்கு இன்னகாலத்தில் இவ்விதம் கருமஞ்செய்யவேண்டும் என்பதையுஞ் சந்நியாசமும்-பிராயோபவேசமும்- சக்கமனமும் - ஆகிய இவற்றின் மேன்மையையும் பின்னும் ஜீவனுக்கு உறுதியாயவற்றையும் வீடுபேற்றிற்கு நிமித்தமாயவற்றையும் இப்புராணம் புகலாநின்றது.

ஸ்ரீ

## சிறப்புப்பாயிரம்.

ஸ்ரீராமமயம்.

கவித்தலம் கலவிச்சாலைத் தமிழ்ப்புலவர்.

மு. வை. ஐயாத்துரை ஐயரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

―― * ――

பூமகளும்புவிமகளும்புகழ்மகளுமகலாதபுணாச்சிறோங்கி
நாமகளுநோற்றவரினளிபுரியப்பெற்றதுரைசாமிநாமன்
தூமகளுநறுந்துளவத்தொடையலுஞ்சேரகலத்தான்றூயனென்பன்
பாமகளுங்களிசிறப்பப்பைந்தமிழிற்சாருடதைபகர்ந்தான்பாரீர்.
உலகளிக்குந்திருமார்பனுவந்தவணபுள்ளரசுக்குரைத்தநூலை
பலகலையுநன்குணர்ந்தசவுனகாதியர்கேட்பப்பகர்ந்தான்சூதன்
அலகிலபுகழ்க்கவித்தலத்திலவதரித்ததுரைசாமியருட்சிறந்தான்
நிலவலயத்தோருவப்பக்கருடபுராணந்தமிழினிழுதினன்றே.

―― * ――

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

சென்னைச் சருவகலாசாலைத் தமிழ்த் தலைமைப்புலவர்

கோமளபுரம்

இராசகோபால பிள்ளையவர்கள் செய்த

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொன்னுரிதழிப்புரிசடையோன்புண்டரிகவானவன்முதல
அன்னோராதிமூலமலராமேலிவனென்றுறையுண்மை
இந்நானிலமிசையாருமினிதுணர்ந்துய்வானிபமுன்
பன்னுவகைபபவந்தவன்கண்படைகொளவதுவண்கவித்தலமே.

கன்னற்கமுகவேலனிகதழும்பண்ணைக்கருமேதி
உன்னிக்குழவிமுலைவழித்தாலொழுகுதீம்பாலொண்டிவலை
நன்னர்க்கதிர்வெண்டரளமெனநாகுகன்குமெருளாயே
முன்னிமருணாபின்னவளமொக்குரங்கவித்தலமே.

இறந்துபாடுபிறக்கையனுமிடர்வெடவத்திலையாமே
சிறந்துபாடுதிருமறையாற்சிவனவ்விரிஞ்சிதேவரோலம்
துறந்துபாடுதூயர்பலர்துவன்றிவழிபாடியற்றியுளம்
மறந்துபாட்டாநேத்துவளமாகாடொண்கவித்தலமே.

இந்தத்தொன்மாணகர்க்கேந்தலினியகருணையன்புடைமை
உந்தற்கறியவாய்மைபொறையுணர்வாதியநற்குணமெருங்கு
வந்துற்றொருபானிடப்பவம்வாய்ந்தாங்கமைந்தபெருந்தகையான்
சிந்தைத்தூயனெனலென்னேசெயலுந்தூடன்மெரிக்கினம்மா.

இறுதிவேலைத்தனிமுதல்வயிலிதுபுகக்குக்கியிடை
அறுதியாகவோர்புடையினங்கிமற்றுமுமிழுமையந்
துறுமேயவ்வெச்சில்படுமும்டர்ச்சிரிதும்பேணுமே
பெறிநின்பேறிஃதெனத்திருமாற்பேணிப்பராய்வாழ்பேரியல்பான்.

பொய்மைநிலைகரும்புறச்சமயபொருவெம்முரட்கார்மதக்களிறு
வெம்மைதணந்துவீழ்ந்தழுங்கியிரிபலபோகவெகுண்டடர்த்து
மெய்மைதெரித்தவிறற்சீயமுங்கோர்பங்கர்வேந்தென்னும்
எம்மையுடையானிணையின்கீழினையபவொழுகும்பெற்றியான்.

தெனுதுகுமரிவடாதுவரைதிருவேங்கடமென்சிலம்பூடு
நனுதுபுகழ்மைசிறுவியுபர்தமிழ்மாப்புணரிவாய்மடுத்தோன்
பினுதுமின்பென்றுறுபொருளைப்பெட்பிற்கரப்போர்முகங்கவிழ
மனுதுமனுதெனறிரவலர்க்குவாய்ந்துபுரவுசெயும்வள்ளல்.

என்னுஞ்சீமாந்துரைசாமியெந்தலிருநீர்நிலவரைப்பில்
மன்னுமுயிர்சென்மருளமக்குவதுக்குங்கருமமற்றில்லை
இன்னபுரிசமன்றவெளிவியம்புகருடபுராணமுனை
தென்னன்சொல்லிற்செய்தளித்தான்றெள்சொல்வசனந்தெரியாக்கே.

:(*):



ஸ்ரீ

ஸாவம்விஷ்ணுமயம்ஜகத்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஸ்ரீமதே வேதாந்த குரவேநம,

# ஸ்ரீகருடபுராணவசனம்.

## முதலாம் அத்தியாயம்.

### நான்முகம்.

அறுசீரகழிநெடி லாசிரியவிருத்தம்.

திருவடிகள்.

கைம்மழுமுவிலையேங்கதிர்நிலாச்செஞ்சடைகார்க்களங்கரந்து
மைம்மலிகார்க்குழலியஞ்சனை தேவிமணி வயிறுவந்த தோன்றல்
தெம்முலி முப்புரமெரித்த செயலெற்றென் றும்பருமேசெப்பிவாழ்த்த
விம்முறுநீ ளிலங்கையிற் பல்புரமெரித்த விறலொன்றுள்விரும்பிவாழ்.

## பெரியதிருவடிகள்.

வரியதிருவடிபுனையும்விழியுடைய விநதைபயீன்றவீறுவந்து
கரியதிருவடிவுடையமறைமுதல்மருவாகனமதாயோன்
உரியதிருவடியவன்றனங்கணவன்கீர்த்தியெனஉரைத்தேனெஞ்சே
பெரியதிருவடியையினிப்பேணுதியேற்பிறவாதபேறுற்றுயே.

## ஸ்ரீமத் வேதாந்தாசாரியர்.

திருமான்மெய்ப் பரனேனோர் திறனிலா வுயிர்களெனச் செய்யவேதம்
ஒருவாமலுனாசெயவு மஃதுணராதிழுதைபர்செய்குறுவா தந்துய்
பெருவாத முன்பருமா றியற்றிவயம் பெறுமங்கள்பிரானைப் பில்லாக்
கருமாதவன் சமயங் கழூடவரு தூப்புலம்மாற் கருதி வாழ்வாம்.

## ஸ்ரீமத் பாஷியகாரர்.

முதுமறைநெறியோடு முரணியிகன்மொய்ச்சமய முரணீத்தேக
மதுவிரிபைந் துழாயலங்கல் மணிவண்ணன் சமயநெறிமலிந்திட்டோ
ங்க, எதுபொருளு முணராருஞ் செம்பொருளை யினிதினுணர்துய்
ய்யாணர்ப், புதுவெயில்சூழ் மணிமாடப் பூதபுரி புங்கவன்றாள்போ
ற்றிசெய்வாம்.

## ஸ்ரீமத் பராங்குசர்.

விண்ணவர்க்குஞ்செவியூற நாலூறவிரிதமிழ் மாமறைவிரித்து
மண்ணவர்க்குவகுத்தவம்மான்மலிபொருநற்றிருக்குருகூர்வந்தவள்ளல்
எண்ணவர்க்குந்தர்துபிறபெண்ணனைத்துமிழுக்குற வானிமையோர்க்
குந்தீக், கண்ணவற்குமெட்டாதகதிபெறயாமவன்கழல்கள் கருதிவாழ்
வாம்.

## ஸ்ரீமத்தெய்வநாயகியார்.

நய்யாத நான்மறைகணவிற்றுமொருசெழுமுதல்வன் னிறைந்துவைகி மெய்யாய தலம்புரிந்தோர் விதுவணிவோன் விரிமலரோன் விண்ணோராகப், பொய்யாது புரிந்தவரைப் புரந்தளிக்குங் கடைக்கணருள் பொழிந்துபுண்கண், செய்யாளையெழில யிந்திரபுரத்தி லமர் செய்யாளைச் சிந்தித்துய்வாம்.

## ஸ்ரீமத்தெய்வநாயகப்பெருமான்.

நயந்தரிக்கும் படைக்குமழிக்குந்தொழில் பூணற்குணக்குக்கடலாய் நல்கு வியந்தரிக்கு முக்கணோன்கஞ்சப்பிரமனுடையார்க்கும்விபு ரர்க்குந்தன், சயந்தரிக்குந் திகிரிசிரம் பொறிக்கி மயிந்திர புரத்துத் தலத்திலமேய, வயந்தரிக்குந் தெய்வநாயகப் பெருமான் மாணடியை வழுத்தல்செய்வாம்.

## பெரியார் அருளிச்செயல்.

வாணிலாமுறுவல் சிறுநுதற்பெருந்தோண் மாதரார்வனமுலைப் பயனே, பேணினேனதனைப் பிழையெனக்கருதிப் பேதையேன் பிறவி நோயறுப்பான், ஏணிலேனிருந்தே னெண்ணினேனெண்ணி யிளைய வர்கலவியின்றிறத்தை, நாணினேன்வந்துன்றிருவடியடைந்தேனைமி சாரணியத்திலெந்தாய்.

ஏதம்வந்தணுகா வண்ணநாமெண்ணி யெழுமினோதொழுதுமென்றி மையோர், நாதன்வந்திறைஞ்சு நைமிசாரணியத் தெந்தையைச் சிந் தையுள்வைத்துக், காதலேமிகுந்த கலியன்வாயொலிசெய் மாலை தான் கற்றுவல்லார்கள், ஓதநீர்வைய மாண்டுவெண்குடைக்கீ ழும் பருமாகுவர்தாமே.

—:(*)—

## நூல்.



திருவுறையும் திருமாமகளாகிய திருமாலினது உந்தியில் தோன்றிய நான்முகக்கடவுள் படைத்தஇடம் அகன்றஇப்புவியின் கண்ணே தவம்புரிவதற்குத் தகுந்த தானமாய் புராணங்களென்னும் பயிர்கூழ் விளையும் நல்ல செய்ந்நிலனும் அடவிகளுக்கெல்லாம் அரசெனற்பாலதாய், விளங்காநின்ற * நைமிசாரணியத்தில், வசிக்கின்றவர்களும், வேதவேதாந்தங்களை ஐயந்திரிபற உணர்ந்தவர்களும், பிரமருத்திரேந்திராதி தேவர்களை நேரானவர்களும், சொரூபத் தியானம் செய்கின்றவர்களும், ஸ்ரீ அரிகதா சங்கீர்த்தன சீலர்களும் ஆகிய சௌனகாதிமகருஷிகளைச் சேவிக்கவிரும்பிப் புராணம்புகல்வோரில் தலைமை பெற்றவராகிய சூதமாமுனிவர் அந்நைமிச வனம்வந்து அச்சௌனகாதி அருந்தவர்களைக் கண்டு தண்டனிட்டு சமீபித்தார், அம்மாமுனிவர்கள் உவந்து ஈந்த ஆசனத்தில் விநயத்தோடு வீற்றிருந்தனர்.

பின்னர் ஆங்கிருந்த ருஷிகளெல்லாரும் சூதபுராணிகரைப்பார்த்து அஞ்சலிசெய்து சூதமாமுனிவரே! தேவரீர் முன்னமாய் வைணவ சைவ புராணங்களைக் கேட்டு மிக்க களித்தோம். பிரமனைக் குறித்தவை இராசத புராணமாகலாலும் சிவனைக்குறித்தவை தாமத புராணமாகலாலும், முதற்கடவுளைக் குறித்தவை சாத்துவிக புராணமாகலாலும் அவ்விஷ்ணு புராணமே தத்துவமசொல்லு மாகலாலும்விஷ்ணுபுராணம் ஒன்றனை இன்னும் கேட்க விரும்புகின்றோம். தேவரீரோ பகவதம்சராகிய வேதவியாச பகவானுடைய மாணாக்கராயினீர் அல்லதூஉம் அப்பகவான் யாவற்றையும் ஓதுவித்தருளத் தெளிந்தீராயினீர் நீர் அறியாதது ஒன்றும் இலது தர்மார்த்த காம மோக்ஷங்களைக் கொடுப்பதாகிய ஒரு சாத்துவிகபுராணத்தை எங்கட்குச் சொல்லும்படி கருணைகூர்ந்திலரா எழுந்தருளியிராநின்ற தேவரீரைப் பிராத்திக்கின்றோம். ஓ சூதமாமுனிவரே! உலகில் ஜீவர்களுக்குச் ஜனனமும் மரணமும் எக் காரணத்தால் உண்டாகின்றன?

* நைமிசாரணியம் நூற்றெட்டுத் திருப்பதியிலொன்று.



மஹாவிஷ்ணு



கெருடாள்வார்



சௌனகாதிமஹாரிஷிகள்   சூதமாமுனிவர்

எந்தச் செய்கையால் நரகம் சுவர்க்கமும் வருகின்றன? எக்காரணத்தால் தீராப்பிணிவரும்? எப்போது ‡ பிரேதசன்மம்வரும்? எதனால் அச்சன்மம் நீங்கும்? எதனால் முத்தி கிடைக்கும்? இவற்றையெல்லாம் எங்கட்குத் தெளிவுறச் சாற்றவேண்டும் என்று வேண்டினார்.

உடனே சூதமாமுனிவர் வியாச பகவானுடைய ஸ்ரீபாதங்களைத் திருவுளத்தில் தியானித்து உச்சிமேல் கரங்குவித்துச் சர்வ ஜகத்காரணனாகிய ஸ்ரீமந்நாராயணனைத் தொழுது சௌனகாதி முனிவர்களை நோக்கி அந்தணர்களே! யாவற்றையும் முற்றும் உணர்ந்த நீர் நன்கு வினவினீர், உங்களுடைய வினாவிற்கு விடையாக ஒரு நல்லகதை சொல்லுகின்றேன். மனத்தை ஒருவழிப்படுத்திக் கேட்பீராக. ஓ மகாருஷிகளே! அயனரனாதி தேவர்கட்கும் தேவனும், சர்வாந்தர்யாமியும், சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களை லீலையாகச் செய்கின்றவனும், புருஷோத்தமனும், பரமபதவாசியும் ஆகிய ஸ்ரீமந்நாராயணனை முன்னொரு காலத்தில் கருடபகவான் பணிந்து நீர் இப்போது வினவியது போலவே உலக நன்மையின் பொருட்டு வினவி விடை பெற்றனன் அவற்றைச் சொல்லுகின்றேன் கேண்மின். அக் கருடபகவான் பரமனைநோக்கி ஏ ஜகந்நாதா! பரந்தாமா! எள்ளினுள் எண்ணெய்போல எங்கும் நிறைந்தவனே! அயனரனாதியரும் இன்ன தன்மையனென்று அறியாத ஸ்ரீஹரியே! ஜீவர் உலகில் யாது காரணத்தால்பிறந்து இறந்து சுவர்க்க நரகங்களை அடைகின்றனர்? எந்தப் பாபத்தால் பிரேத சன்மம் அடைந்து எந்தப் புண்ணியத்தால் அது நீங்குகின்றனர்? எக்கருமத்தால் நிரதிசயஇன்பவீடாகிய நின்னுது உலகை எய்துவர்? முன்செய்த பாபங்களை மரணகாலத்தில் எதனால் நீக்கி நல்லுலகுபெறுவர். பாபங்களெல்லாம் எக்கருமத்தால் நிவர்த்தியாகும்? ஓ பரந்தாமனே! மரிக்குங்காலத்தில் யாவரை நினைத்தால் நற்கதி கிடைக்கும். இவற்றையெல்லாம் அடியேனுக்குச் சாற்றியருள்வேண்டுமென்று பிரார்த்திக்க, பிரபுவும், நாரகத்தில்அயனம் செய்கின்றவனும் நாரசமுகம் கொள்கின்றவனும், எல்லாருடைய மனத்திலும் உறைந்து யாவற்றையும் பார்க்கின்றவனும், சகல செயல்களுக்கும் காரண

‡ பிரேதசன்மம் பூதப்பிரேத பைசாசாதி சன்மங்களிலொன்று.

மாகியவனும் ஆகிய அவ் வரிபகவான் கருணை புரிந்து வைனதேயனைப்பார்த்து மகா பராக்கிரமசாலியாகிய கருடா! நன்குகேட்டனை. நீகேட்டவையெல்லாம் உலகில் இரகசியமாயுள்ளன. அவற்றைக் கூறுகின்றும் கேண்மோ. பலநாள் வாழ்ந்தாலும் ஒரு நாளில் இறப்பது சத்தியம் என்பதை ஒரு சேதனனாயினும் நினைக்கின்றான் இலன். பிறத்தலுற்ற பின்பு இறத்தல் உண்மை என்று நினைக்கின்றவன் கோடியில் ஒருவன் உளனோ? இலனோ? உயிர்கவரும் கூற்றுவன் ஒருவனுளன். இறுதிக்காலத்தில் அவன் கையில் அகப்படவே வேண்டும் என்று அடுத்தடுத்து நினைத்துத் திடுக்கிடுகின்றவன் யாவனோ அவன் ஒருவனே யின்றுபோயிற்று நாளை போயிற்று என்று வாணாள் வீணாய்க் கழிக்கின்றதே, நமன் வந்து விடுவனே. ஐயோ என்செய்வோம் என்று அஞ்சி நல்லறம் செய்வான். ஒருவன் தனக்கு உரியகருமங்களைச் செய்வானேல் அக்கருமங்களே அவனைக் காப்பாற்றும். இன்னமரபில் பிறந்தவனுக்கு இன்ன கருமங்கள் தாம் உளவென்று வேதசாஸ்திரங்கள் கூறுகின்றன. கலுழனே! அவற்றை யுணர்ந்து தான்பிறந்த குலத்திற்கு ஏற்பனவாகிய கருமங்களைத் தவிர்த்து மேலிலும் கீழிலும் செல்லாமல் உரிய கருமங்களையே யாவன் புரிகின்றானோ அவனே எவ்விடத்திலும் மேன்மை பெறுவன்.

பிரமக்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்று நான்கு வருணத்தார் உளர். அவர்களில் பிராமணருக்குத் தானம்கொடுத்தலும், வாங்கலும், யாகஞ்செய்தலும், செய்ய உரியவர்கட்குச் செய்வித்தலும், வேதமோதலும், ஓத உரியவர்களுக்கு ஓதுவித்தலும் ஆகிய ஆறுகருமங்கள் உளவாம், க்ஷத்திரியருக்கும் வைசியருக்கும் தானம் கொடுத்தலும், யாகஞ்செய்தலும் வேதம்ஓதலும் ஆகிய மூன்றுகருமங்கள் உரியவாம். சூத்திரருக்கு முதல வருணத்தோர் ஏவும் தொழில்களைப்பணிந்து செய்தலே உரியதாகும். ஓ கருடா! அவரவர் மரபிற்குறிய ஒழுக்கத்தில் நிற்றலே அவரவருக்குப் பெரிய தவமாகும். அத்தவத்தில் வழாது ஒழுகுவார் யாவரோ அவரே போகமும் யோகமும் ஒருங்கெய்தி நெடுநாள் வாழ்ந்து இறுதியில் நல்லுலகடைவர். ஆகையால் யாவரும் தத்தமக்குரிய ஒழுக்கத்தில், நிற்பதுவே சிறப்பாகும். யாவராயினும் எப்பொருளையும் விழையலாகாது. எத்

தன்மைத்தாய மாதவத்தையும் அந்த இச்சை கெடுத்து விடும் அவாவை யொழித்தவரே பேரறிஞராகுவர் என்றருளிப் பின்னும் அருளிச்செய்கின்றனன்.

—(:*:)—

முதலாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

# இரண்டாம் அத்தியாயம்.

—(-*-)—

சூத மகாமுனிவர் நைமிசாரணிய வாசிகளே ; பின்னர் வாசுதேவன் பறவைக் கரசே ! உலகில் எண்பத்துநாலு லட்சம் யோனிபேதங்களுண்டு. அவை அண்டசம், உற்பிசம், சராயுசம், சுவேதசம் என்ற நான்கு பிரகாரமாயுள. அந்த நான்கு வகுப்பில் முட்டையினின்று இருபத்தொறு லட்சம் பறவை முதலியவைகளும், பூமியினின்று இருபத்தொரு லட்சம் மரம் முதலியவைகளும் கருப்பையினின்று இருபத்தொரு லட்சம் மனிதர் முதலானவர்களும், வேர்வையினின்று யிருபத்தொருலட்சம் கொசுரு முதலியவைகளுந் தோன்றுவனவாகும். கலுழனே ! சன்மங்களில் மானிட சன்மம் கிடைப்பது அரிதினும் அரிது. அச்சன்மமே புண்ணிய சன்மமாம். ஒரு பொருளை ப்பார்க்கக் கண்ணும். கேட்கச் செவியும், இனிமையை யுணர நாவும் நாற்றமறிய நாசியும், காம வின்பத்துக்கு மெய்யும், நன்மைதீமைகளை ப்பகுத்துணர உணர்வு முளவாயினபடியால், மானிட சன்மமே சிறப்புடையதாகும். அம்மானிட சன்மத்தில் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்று நான்கு சாதியாருளர். ஆடையொலிக்கும் வண்ணாரும் தோல் தைப்போரும் நாட்டிய மாடுவோரும் ஓடம் விடு

வோரும் கம்மாளரும் † நுளையரும் வேடரும் ஆகிய விவர்கள் அச்சூத்திர சாதியாரினும் தாழ்ந்த சாதியாராவர். உணவும் உறக்கமும் அச்சமும் புணர்ப்புமாகிய விவைகள் எல்லாப் பிராணிகளுக்கும் இயற்கையா யுள்ளனவாகும் ஞானமாத்திரம் எல்லாவுயிர்களுக்கும்பொதுவன்று. சில தேசங்களில் மானிடர் ஓரே காலுடையவராயும், இரண்டு கால்களுடையவராயும். அநேக கால்களுடையவராயும் இருக்கின்றனர். கிருஷ்ணசாரமென்ற மான் எந்தப்பூமியிலிருக்கின்றதோ அப்பூமியே புண்ணியபூமியாகும். அப்பூமியில் தேவர்களையும், மகருஷிகளையும், பிதிரர்களையும் பூசிப்போருக்கு அதிக நன்மையுண்டாகும், அப்புண்ணிய பூமியில் முப்பத்து முக்கோடி தேவர்களும் எப்போதும் சந்நிதிகொண் டிருக்கின்றார்கள்.

கலுழனே! பூதப் பிரேதபைசாசாதியுள் தேகம்பெற்ற சீவர்சிரேஷ்டர், அச்சீவருள் பசு பட்சி சன்மமடைந்து சிறிது அறிவினால்சீவிப்போர் சிரேஷ்டர். அவருள் மனிதர் சிரேஷ்டர். அம்மானிடருள் பிராமணர் மிகச் சிரேஷ்டர்; அப்பிராமணருள் வேதசாஸ்திர முணர்ந்தவர் சிரேஷ்டர். அவருள் அப்படியோ இப்படியோவென் றையப்படாது உபசாரவழக்கை நீக்கிவேதார்த்தங்களை உள்ளபடிஉணர்ந்தவர் சிரேஷ்டர். உணர்ந்த வழியிலேயே நிற்பவர் உணர்ந்தவரினும் சிரேஷ்டர், அவருள் பிரம்மஞான மடைந்தவரே மிகச் சிரேஷ்டராவர். ஓகருளா ! அநேககோடி சன்மங்களாலே பெறப்படுவனவாகிய சுவர்க்க மோட்சங்களை அடைவதற்கு மானிட சன்மமே காரணமாகியது அச் சன்மத்தை அடைந்தும் நல்வினை செய்து நல்லுலகுபெறாமல் நரகம் புகத் தீவினையே புரிந்து அச் சன்மத்தை வியர்த்த மாக்குவோரே உலகில் பலருளர். புண்ணியத்தா லடைந்த அம்மானிடசன்மத்தால் பேறுபெறாதோர் தமக்குத்தாமே வஞ்சனை புரிவோராவர். மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசையாகிய இவற்றிலேயே தலைப்பட்டுத் தன்மங்களையறியாது உழல்பவன் யாவனோ அவன் மிருகங்களோ டொப்பாவனேயன்றி நன்மக்களோடு சேரான். அவனுந்தீயன் ஒருவனு மிலன் ஆசைப்பெருக்கத்தினாலே பிணிக்கப்பட்ட மன்மு

† நுளையர் - நெய்தனிலமாக்கள்.

டையான் இவ்வளவு அவ்வள வென்பது இல்லாமல் யாவும் நிரம்பக் கிடைத்தாலும் இன்னும் வேண்டும் வேண்டு மென்றே அலைவானே யல்லாமல் கிடைத்தமட்டில் சாலுமென்று திருப்தியடையான். நூறு பொன்பெற்றானேல் அவன் திருப்தியடையாது ஆயிரம் பொன்னை யிச்சிக்கின்றான். ஆயிரம் பொன்னடைந்தவன் லட்சம் பொன்னை யிச்சிக்கின்றான். லட்சம்பொன் னடைந்தவன் கோடிப் பொன்னை விரும்புகிறான். கோடிப்பொன்னை யடைந்தவன் ஒருதேயத்தை விரும்புகிறான், தேசமடைந்து அரசனாயினவன் புவிமுழுதுக்கும் சக்கரவர்த்தியாக விரும்புகின்றான். சக்கரவர்த்தி தேவனாக விழைகின்றான். தேவர்களோ இந்திரனாக விரும்புகின்றார்கள். அவ்விதம் இச்சை மேல்மேல் பெருகுமே யன்றி ஒருவர்க்கும் அது ஒழியாது இந்த இச்சையை யொழிக்காதவன் கண்டவரை யெல்லாங் கரங்குவித்து இரந்து அவர்களால் இகழப்பட்டு நரகத்துக்கே ஆளாவன். கொடுங்கேடு யாவும் ஒருங் கெய்துவதற்கு அவாவே காரணமென்று அதனை வேரறுத்த மகான்கள் யாவராலும் போற்றப்பட்டு அந்தியகாலத்தில் சுவர்க்கலோகம் சார்வார்கள். புலன் சென்றவழி மனத்தை விடாது அடக்கிச் சுதந்தரனாய் யாவன் இருக்கிறானோ அவனே எல்லா நலங்களுக்கும் உரியனாவன். சுதந்தர மில்லான்பால்ய பருவத்தில் தந்தை தாயரது சொற்கேட்பான் யௌவன பருவத்தில் மோகஸ்திரீக்கு மூதேவியாகிய தன் தேவியினது கட்டளையிடுதலை பணிந்துதலைமேற் கொள்வன். வார்த்தகிய பருவத்தில் புத்திரபௌத்திரர் சினந்து கிழப்பிணமே! வாய்புதைத்து வெறுமனே கிடப்பாயென்று அதட்டிச்சொல்லு மொழியைக்கேட்டுப் பொருமிக் கிடப்பன். ஆதலால் கற்றுணர்ந்த ஞானமில்லான் பெண்களைப் போலவே என்றுஞ்சுதந்தர மில்லாதவனே யாவன்.

கலுழனே! கலைமான் புல்லாங் குழலின் இசையைக்கேட்டு இருப்பிடம் விட்டுப் பேராது இருந்து வேடனால் பிடிக்கப்படுதலால் அக்கலைமான் காதால் கெடுவதாகும், யானை புணர்ச்சியை விழைந்து பெண்யானையைத் தொடர்ந்து சென்று யானைப்பாகர்கள் தோண்டிய குழியில் விழுதலால் அவ்யானை பரிச இன்பத்தால கெடுவதாகும்விட்

டிற் பூச்சி விளக்கைக்கண்டு நல்ல கனியென்று நினைத்து விழுந்து அவ்விளக்கில் சாகின்றமையால், அப்பூச்சி கண்ணால் கெடுவதாகும் வண்டு உண்ணக்கருதி இருளில் தேனைக் சேர்த்து அதி லிருக்கும் போது நறுந்தேன் கொள்பவன் தீயால் கொளுத்துகின்றமையால் அவ் வண்டு நாவால் கெடுவதாகும். மீன் தூண்டிலின் முனையில் கோத்த இறைச்சியின் நாற்றத்தைவிரும்பி உயிர்நீப்பதால் அம்மீன் நாசி யால் கெடுவதாகும். ஓ கருளனே! அங்ஙனம் ஓர் இந்திரியத்தா லேயே அவைகள் நாசமடையுமேல் பஞ்சேந்திரிய வாஞ்சைகளையுமு டைய மனிதன் அருங்கேடுறு ஐயமுளதோ. இல்வாழ்க்கையில் சுக துக்கங்களில் எது மிகுதியானாலும், பெண்டு பிள்ளைகளாகிய வன் கயிற்றால் கட்டுண்ட மனிதன் என்றும் நற்கதியடையான், பாலிய னாயினும், யுவாவாயினும், விருத்தனாயினும் நாள் கழிதலை எண்ணும் மிருத்தியு ஒருவன் உளனென்றுணர்ந்து நடப்பானிலன். உலகில் பிற ந்து பிறந்தே இறக்கின்றான். கோளாதே வந்து பிறப்பது போலவே பெண்டு பிள்ளை மனைகளைவிட்டு யாவரும் பார்த்திருக்க சொல்லா மலே போகின்றான், தாய் தந்தையர் பெண்டு பிள்ளைகள் ஒருவரும் துணையின்றித் தானொருவனாகவே எப்படி வந்தானோ அப்படி அவன் மாத்திரம் ஒரு தனியே போகின்றான். ஒருவன் மரித்தவுடனே அவன் தேகத்தைக் காஷ்டம்போலப் புவியில் கிடத்தி உறவின ரெல்லாரும் ஆ! ஆவென்று அரற்றுகின்றனர். அவ ரழுகின்றமையால் இறந்தவ னடையும் பயன் யாதுளது? பொய்ப்பத்திர மெழுதுதல் பொய்க்கரி கூறுதல் வழிப்பறித்தல் கொலைபுரிதல் முதலிய தீத்தொழில்களைப் புரிந்து ஒருவன் பொருள் சம்பாதிக்க அப்பொருளை, அவனைச்சார்ந்த எல்லாரும் அனுபவிப்பார், பொய்யோலையெழுதுதல் முதலிய அத் தீய வினைகளைச் செய்ததால் வரும் கொடிய பாபத்தில் அப்பொருளை யனுபவிக்கிறவர்களுக்கும் பங்குண்டோ வெனில் ஒருசிறிதும்அவர்க ளுக்கில்லை; அப்பாபச்செயலைச் செய்து பிறர்பொருளைக் கவர்ந்தவன் யாவனோ அவனொருவனே பாவம் முழுதுக்கும் பாத்தியனாகித்தீவாய் நரகமெய்துவன், அங்ஙனம் தீத்தொழில் புரிந்து ஈட்டியபொருள் இறந்தபின் அவனோடு செல்லுமோ வென்றால் ஒரு சிறிதுஞ் செல்லாமல் அவனை விட்டு மனைக்கண்ணேயிருப்பதாகும் உற

வினற் முதலியோரே சவத்தோடு மயானம் வரையிலே சென்று உடனே மீளுவர். இறக்கு முன்னமே அவன்செய்த பாப புண்ணியங்களே அவனுடன் செல்வனவாகும், எந்தப் பொருளானது எமக்குத் தொண்டனாகிய ஒருபிராமணன்கையில் கொடுக்கப்படவில்லையோ அப்பொருள் உடையவனது பொருளன்று. உலோபனிடத்தி லிருப்பதாகிய பெரும்பொருள், ஐயோ நாம் பிராமணர் கையில் கொடுக்கப்படவில்லையே திருவண்ணை முதலிய யாத்திரைகளிலும் செலவு செய்யப்படவில்லையே, புழுமலக் கூடாகிய தேகம் அநித்தியமாயிற்றே ! நம்மையுடையான் அதனை யறிவானில்லனே ! அவனிறந்தபின்பு நம்மையாவன் கவர்ந்து கொள்வனோ ! ஒருங்குகவர்ந்து அவன் எந்தவிலைமகள் கையில்கொடுப்பானோவென்று கதறுவதாகும். பூர்வ சன்மத்தில் தானதர்மங்கள் செய்தவனே மறுசன்மத்தில் மக பாக்கியவனாகின்றமையால் அச்சன்மத்திலும் அப்படியே செய்தால் மறுசன்மத்தில் அதிக தனவானாவான்! யாவன் அத்தான தருமங்களைப் பத்தி சிரத்தையோடு செய்கின்றானோ அவனே தர்மார்த்த காமமோக்ஷங்களைப் பெறுவன். பத்தி சிரத்தையின்றி அவற்றைச் செய்தவன் செய்யாதவனே யாவன், தர்ம தானங்களைச் செய்கின்றமையாலே எண்ணியவற்றை யெல்லாம் எண்ணியபடிப் பெறலாகும். அரும் பெறலாகிய மோக்ஷமுங்கிடைக்கும் பத்தியோடு செய்யுந் தருமம் தினையினுஞ் சிறிதாயினும் மலையினும் பெரிதாகும். ஒரு பொருளு மில்லாத ருஷிகளெல்லாம் தம்மனச் செய்கையாலேயே விறிசி வேந்திராதியருக்கும் அரிய நிரதிசய இன்பவீடாகிய எம்முலகுபெறுகின்றனர் ஆதலால் மனத்தூய்மையும் பத்தியும் இல்லாமல் தானம் தருமம்தவம்முதலிய வற்றைச் செய்தால் அவை சிறிதும் பயன்தாரா. முத்தி சாதனங்களாகிய பத்தியேனும் பிரபத்தியேனும் செய்தலும். பத்தியோடு தரும தானங்களைச் செய்தலுமே உத்தமமாம் என்றோதி யருளினன்.

---

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

# மூன்றும் அத்தியாயம்.

சூதபுராணிகர் மாமுனிவர்களே! பின்னர்ப் பெரிய திருவடி ஸ்ரீமந்நாராயணனைத் தொழுது ஏ நாதா! மனிதர்களுக்கு மகாகொடியதாகிய பிரேத சன்மம் எதனால் வராமல் ஒழியும், அதனை அருளிச்செயவேண்டும் என்று பிரார்த்தித்தலும், சர்வாந்தரியாமியாகிய பகவான் ஓ கருடா! மனிதர் இறந்தவுடனே செய்யவேண்டிய கருமங்களைச் சிறிது நவில்கின்றும். கேண்மோ, பிரேத சன்மத்தை நிவர்த்திக்க விரும்பிய யாவரும் இறக்கு முன்னமே தமது கரத்தாலே விருஷோச்சநம் செய்தல்வேண்டும். ஸ்திரீ சூத்திராயினும் தவிராது அதனைச்செய்தல் வேண்டும். ஐந்து வயதுக்கு மேற்பட்ட வயதுடையாரில் ஆண், பெண் யார் மரித்தாலும் அவருக்குப் பிரேதசன்மம் வராமையின்பொருட்டுக் கருமம் செய்கின்றவன் விருஷோச்சநம் செய்தல்வேண்டும். பிரேதசன்மம் அடையாமைக்கு விருஷோச்சநம் செய்யவேண்டிய தன்றி வேறொன்று மிலது. உயிரோடிருக்கும் காலையாயினும் இறந்தபின்பாயினும் யாவனுக்கு விருஷோச்சநம் செய்யப்பட்டதோ அவனுக்குப் பிரேத சன்மம் வருவதிலது. இந்த விருஷோச்சநம் செய்யாமலே வேறு எவ்வித தானம் கொடுத்தாலும் விரதங்கள் செய்தாலும், யாகம் இயற்றினும் அப்பிரேதசன்மம் பிடியாமல் ஒழியாது என்று திருவாய்மலர்ந்தருளினன்.

பெரியதிருவடி சர்வேசனை வணங்கி ஓ தேவதேவ! விருஷோச்சநம், இறக்காத முன்னர் எக்காலத்தில் செய்யவேண்டியது? இறந்த பின்னர் எச்சமயத்தில் செய்யவேண்டியது? அதற்கு இன்னும் பலன் யாது; அவற்றைக் கூறி யருளவேண்டும் எனலும், அயனராதியர்க்கு அரியனும், நம்போலிய அடியாருக்கு எளியனும் ஆகிய கருணைபங்கடவுள், கலுழனே! இறந்தவனைக் குறித்து விருஷோச்சநம் செய்யாமல் சிராத்த முதலியயாவும் செய்தாலும் சிறிதும் அவனுக்குப் பயனில்லை. மரித்த பதினொன்று நாள் எவனுக்கு விருஷோச்சநம் செய்யப்பட வில்லையோ அவனுக்குப் பிரேத சன்மம்

உறுதி யாகும். விருஷோச்சகம் செய்யப்பட்டால் இறந்தவன்பிரேதசன்மம் அடையாது பெரியோர்கள்சேரும்உலோகம்சேர்வன், முத்திக்ஷேத்திரங்களில் மாய்ந்தவன் எமனால் பீடிக்கப்படாமல் நல்லுலகு சேர்வன். விருஷோ ச்சகம் யாவனுக்குச் செய்யப்பட்டதோ. அவனும் அவ்வுலகுசேர்வன். புத்திரனாயினும், மனைவியாயினும், பெண் வயிற்றுப் பிள்ளையாயினும், பெண்ணாயினும், விருஷோச் சகம் செய்யலாம். புத்திரன் இருப்பானானால் வேறுயாரும் செய்யலாகாது என்றருளினன். 'வேத வுருவனாகிய பறவைக் கரசன் ஓ வாசுதேவா! புத்திரன் முதலிய ஒருவரும் இல்லாதவனும், இல்லாதவளும், இறப்பின் அவர்களுக்கு உத்தரகிரியை யாவர் செய்யவேண்டியது. அருளுகவெனலும், எம்பெருமான் ஓ கருடா! பிள்ளை யில்லாதவன் நரகமன்றி நல்லுல கடையான்,' ஆகலின் எவ்வித அரிதாகிய கருமம் செய்தேனும் ஆண்மகவு பெறுதல்வேண்டும், ஒருவன் தனக்கு நல்வினை ஒன்றும் செய்துகொள்ளாமல் இறந்தாலும் அப்படி மரித்தவனுக்கு அவனுடைய புத்திரர் கிருத்தியம் செய்யாவிட்டாலும், அவன் இராப்பகல் பசிதாகத்தோடு ஐய்யோ! ஐய்யோ! என்று இரைந்து உலகெங்கும் நெடுங்காலம் அலைந்து பின்பு புழுமுதலிய சன்மமெடுத்து மீண்டு மனிதருள் கடையோன் வயிற்றில் பிறந்து பிறந்துமறிப்பன். ஆதலால் ரோகத்தால் பீடிக்கப் படுவதற்கு முன்னரும், வயோதிகம் வருவதற்கு முன்னரும், செயல் ஒடுங்குவதற்கு முன்னரும், ஆயுசு குறைவதற்கு முன்னரும், தெரிந்தவன்தான் அந்தியகாலத்தில் நல்லுலகு அடைய வேண்டியதற்கு நல்வினைகளைச் செய்யக் கடவன் அப்படிச் செய்யாமல் பின்னிட்டுச் செய்வோமென்று ஆலோசிப்பது தீப்பற்றி இல்லம் எரியும் காலைஅதனை அவிப்பதற்குக்கூடம்தோண்டஎத்தனிப்பதை ஒப்பாகு மென்றருளினன்.

(*)

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்

(:*:)

# நான்காம் அத்தியாயம்.

சூதர், அருந்தவர்களே! வேதவுருவனாகிய கருடன் சர்வலோகநாதனை வணங்கி, எ பரந்தாமா ! தானதருமங்களை ஒருவன் மனத்தூய்மையோடு தன் கையாலே செய்யின் பயன் யாது ? அவனுக்காக அவன் புத்திரன் முதலியோர் செய்யின் பலன் என்னை ? செய்யும் முறை பிறழ்ந்து செய்யின் பலன் என்னை இவற்றை மொழிந்தருளுக எனலும், பாப்பணைப் பரமன் கலுழனே ? மனத்தூய்மையில்லாமலும் உறுதியில்லாமலும் செய்யப்படும் நூறு கோதானங்கட்கு எவ்வளவு பலனுளதோ அவ்வளவு பலன் சித்தபரி சுத்தத்தோடு சாஸ்திரத்தில் விதித்த வண்ணம் ஒரு கோதானஞ்செய்யின்அதற்குளதாகும். ஒருவன் மரித்தபின்பு அவனைச் குறித்துச் செய்யும் லட்சம் கோதானங்கட்கு எவ்வளவு பலனோ அவ்வளவு பலன் அவன்இறக்குங்காலத்தில் ஆயிரங் கோதானஞ்செய்யின்உளதாகும். கலுழனே அங்ஙனமாதலால், மரணகாலத்திலேயே கோதானம் முதலிய யாவற்றும் செய்தல் மிக நன்றென்று தெளிக. நல்ல தானமும் நல்ல பாத்திரமும் நல்ல க்ஷேத்திரமும் கொடுப்போனுடைய தூயமனமும் ஒருங்குறின் ஒன்று கோடியாகும். கற்றுணர்ந்த பெரியோர்களிடத்தில் கொடுக்கப்படும் தானம் நாள்தோறும் விருத்தியடையும். வாங்குவோர் உத்தமரானால் கொடுப்போனுக்கு அதிக புண்ணிய முளது விஷத்தைப்போக்கும் மந்திரமும், குளிரைப் போக்கும் அக்கினியும் தம் சத்தியினின்று குறைவுபடாத வாறுபோலத் தானம் வாங்கும் அவ்வுத்தமரும், அவருடைய நற்கருமத்தால் குற்றமிலராவர். உத்தமபலனை யடைய வேண்டுமென்று விரும்புவோன் கோதானமுதலியவற்றை வேத சாஸ்திரங்களையுணர்ந்தஉத்தம பிராமணனுக்குக்கொடுத்தல்வேண்டும். அவ்வேத சாஸ்திரங்களை ஓதாமலும் ! ஒழுக்கத்தில் நில்லாமலும் பிராமணன் என்றபெயரைமாத்திரம் உடையவனுக்குக் கொடுத்தால் அக்கோதானமே கொடுத்தவனுக்கு நரகம் கொடுக்கும். அன்றியும் தகுதியில்லான் வாங்குவானேல் அவன் இருபத்தொரு தலைமுறை யுள்ளவர்களோடு நிரயம் புகுவன். ஒரு கோவை

ஒருவனுக்கே கொடுத்தல் வேண்டும், எக்காலத்திலும் ஓ ராவினைப் பலருக்குக் கொடுக்கலாகாது, அப்படிக் கொடுத்துத் தானம் வாங்கினோர் விற்றுத் தொகையைப் பங்கு செய்துகொண்டாலும், ஒருவர் ஒரு மாதம், மற்றொருவர் ஒரு மாதம் அநுபவித்துக் கொள்ளுகிறதென்று விதித்துக்கொண்டாலும் தானம்கொடுத்தவன் அவனுடைய ஏழு தலைமுறையோடு நெடுங்காலம் நரகவாசஞ் செய்வன். சாதுக்கள் கரத்தில் பொருள் முதலியவற்றைப் பக்தி சிரத்தையோடு கொடுப்போன் அச்சன்மத்திலேயோ மறுசன்மத்திலேயோ பயனை ஐயமின்றி அடைதலால் அவை பெட்டியில் வைத்துப் பூட்டிய பொருளே யென்று நினைக்கத்தக்கது, அதிக தனமுடையோன் இறந்தபின்னர் அவனுடைய மக்கள் அப்பனுக்கென்று பக்திசிரத்தையோடு செய்யும் கிருத்தியங்களால் அவன் அடையும் நல்லுலகினும் மேலாகிய உலகைப் புத்திர னில்லாதவனும் தரித்திரம் சொற்ப தருமத்தை ஆர்த்தியோடு தமது கரத்தால் செய்வாரானால் ஐயமின்றி யடைவர்.

கருடா! அயலூருக்குப் போவோன் கட்டமுதுகையிற்கொண்டு செல்வானேல் வழியில் வருத்தமின்றி இனிதாய்ச்செல்வானல்லனோ? அங்ஙனம் உயிரோ டிருக்குங்கால் அன்னதான முதலியவற்றைத் தனது கையால் செய்தவன் இறந்து செல்லும்போது பசி தாகத்தால் வருந்தாது நல்லுல கடைவன். கையில் கட்டமுது இன்றி வழிச்செல்வோன் பசி தாகத்தால் வருந்துவது போலத் தானதருமங்களைத் தானே செய்யாதவன் இறந்து செல்லும்போது அதிகமுந்துன் பப்படுவன்- புண்ணிய க்ஷேத்திரத்தில் புண்ணிய காலத்தில் செய்த நல்வினை நெய்யினால் அங்கி ஓங்குதல்போல வளர்வதாகும். புண்ணிய க்ஷேத்திர மல்லாத எவ்விடத்திலேனும் புண்ணியகால மல்லாத எக்காலத்திலேனும் விருஷோச்சநம் செய்து நற்சீலனல்லாப் பார்ப்பானுக்குத் தானம் கொடுப்பினும் அவ்விருஷோச்சநத்தின் மகிமையால் உத்தம க்ஷேத்திரத்தில் உத்தமகாலத்தில் உத்தம பிராமணனுக்குக் கொடுப்பின் எப்பலனோ அப்பலன் தவிராதுகைகூடும். மானிடன் நற்கதி யடைவதற்கு முதற் காரணம் விருஷோச்சநமேயென் றுணர்க. கருடனே! தேகம் அநித்திய மாதலால் நல்வினை

களை நாளைச் செய்வோமென்று நினையாமல் நாளும் இல்லுமையாலே செய்தல்வேண்டும். புத்திரனுடையோன் தன் கையால் ஒருதருமமுஞ் செயாமல் இறப்பானேல் நற்கதியடையான். புத்திர னில்லாதவன் நல்வினைகளைச் செய்து மரித்தானேல் நற்கதியை அடைவன் மகம் இயற்றுதலினும், கோதான முதலிய மகாதானம் செய்தலினும் விருஷோச்சநம் செய்தல் மிக உத்தமமாம். கார்த்திகை மாதத்தின் பௌர்ணமியி லாயினும் உத்தராயணத்தில் சுக்கில பட்சத்திலாயினும் கிருஷ்ணபட்சத்திலாயினும், துவாதசியி லாயினும் மற்றெந்தப் புண்ணிய தினத்திலாயினும், தூய மனத்தோடு உத்தம க்ஷேத்திரத்தில் நல்ல நட்சத்திரத்தில் நல்லஇலக்கினம் வேதசாஸ்திரங்களையுணர்ந்துஒழுக்கமுடையதெய்வப் பிராமணங்களை வருந்தியழைத்து சபம்,ஓமம் முதலியவை செய்து தன்னைப் பரிசுத்த னாக்கிக்கொண்டு, நவக்கிரக பூசைசெய்து மாதுர் தேவதைகளை அருச்சித்துப் பூர்ணாவுதிசெய்து மகாவிஷ்ணுவைக்குறித்துச் சிரார்த்தம்செய்து மந்திரநீரால் இடபக்கன்றை மஞ்சனமாட்டி வஸ்திரம் சந்தனம் புஷ்பம் ஆபரணம் ஆகிய இவற்றால் அலங்கரித்து நான்கு ஆன்கன்றுகளோடுஅக்காளைக் கன்றைஅக்கினியைவலம்வரச்செய்துவடக்குநோக்கிநின்று அவ்விடபக் கன்றைப் பார்த்து, தருமமே யிடபமாயினை? பிரமனாலே ஆதியிலே படைக்கப்பட்டனை என்று சொல்லி இறந்தவனுக்குச் செய்யின் அவனைக்குறித்தும், செய்பவன் தனக்கே செய்துகொள்வானாயின் தன்னைக் குறித்தும் அதன் வாலில் புனல்விடுத்து அந்நீரைக் கரத்திலேந்திச் சிரசில் புரோக்ஷித்துக்கொண்டு ஆண்கன்றுகளோடு அவ்விடபக் கன்றை விடுதல் வேண்டும்.

கலுழனே ! விருஷோச்சநம் இறந்தவனைக்குறித்துச் செய்யப்பட்டதானால், உடனே ஏகோதிஷ்ட சிராத்தம் புரிதல்வேண்டும். இறவாதிருப்போன் தனக்குத் தானே செய்துகொள்வானேல் தனக்கு அநுகுணமானவற்றைப் பிராமணர்களுக்கு ஈதல்வேண்டும். விருஷோச் சநம் செய்யாவிடின் பிரேதசன்மம் பற்றுந் தொழியா ததலால் அவ்விருஷோச்சநம் செய்யாமலேமற்ற நல்வினைகளைத்தானே தனக்குச் செய்துகொள்ளினும் மரித்தபின்பு புத்திரர்முதலியோர்

பல நல்வினைகளை மாத்திரம் செய்யினும் அவைகளால் பயனில்லையெ ன்றுணர்க. மரித்த பதினொன்று நாளிலேனும் பன்னிரண்டா நாளி லேனும், ஷோடச சிராத்தம் சபிண்டீ கரணத்திற்கு முன்னமே செய்து சத் பிராமணர்களை எழுந்தருளச் செய்து ததியாராதனஞ் செய்து பலுதானம் கொடுத்தல் வேண்டும். பருத்தியின்மேல் செம்பின் வட்டிலில் சாளக்கிராமம் வைத்து வஸ்திர முதலியவற்றால் அலங்கா ரமும், ஆராதனமும் செய்து, சத்பிராமணனுக்குக் கொடுத்தல்வேண் டும். வைதரணீ என்னு நதியை இனிது கடக்கும் பொருட்டுக் கரு ம்பினால் ஓடஞ்செய்து, பட்டினால் அதனைச் சுற்றி நெய்வார்த்த வெண்கலப் பாத்திரத்தை அதனுள் வைத்து, ஸ்ரீமந்நாராயணனை அருச்சித்து, அவ் வோடத்தைப் பிராமணனுக்குத் தானம் கொடு த்தல்வேண்டும். கலுழனே ! எள்ளும் இரும்பும் பொன்னும் பருத்தி யும் உப்பும் சப்த தானியங்களும் தவிராது பிராமணருக்குக் கொடுத் தல்வேண்டும். செய்வோன் எளியனாயின் அவற்றில் ஒன்று கொடுப்பி னும் அமைவதாகும். சக்தியை யநுசரித்துப் பொருள்கொடுத்துத் திலதானமும், சய்யாதானமும் செய்தல்வேண்டும். இவ்விரண்டுதான ங்களுக்கும் தட்சிணை மிகுதியாய்க் கொடுத்தலால் பிராமணரை உக ந்தருளச் செய்தல் வேண்டும். சய்யாதானம் வாங்கும் பிராமணனை அச்சேக்கையி லிருக்கச்செய்து தானம் செய்தல் மிகவிசேடமாம் புத் திரனில்லாமல் மரித்தவனுக்குப் பௌத்திரன் முதலியோர் யாரே னும் இவ்விதம் செய்யின் நற்கதி யுளதாகும். தன் சக்தியை யநுச ரித்து நித்தியதானம் செய்கின்றவன் யாவனோ ? அவன் இறுதியில்நற் கதி யடைவான். சரீரம் திடமாயிருக்குங் காலத்திலே திருவேங்கட யாத் திரையும், கங்காயாத்திரையும் செய்தல்வேண்டும். தாய்தந்தையர் இறந்த பின்பு ஆண்டுகள் தோறும் அவர்களுக்குச் சிராத்தம் புரி தல்வேண்டும். மாதா பிதா குருக்களுக்குத தன்னால் இயன்ற புண் ணியம் செய்து கொடுத்தல்வேண்டும். கலுழனே ! மரித்தவரைக் குறி த்துக கிருத்தியம் செய்யும்போது. பிராமணர்களுக்கு யாவன் பூரி கொடுக்கிறானோ அவன்வேண்டிய நல்லவையாவும் பெறுவன். அவன் பிரேதசன்மம் அடையான், சந்நியாசிகள் யோகிகள் முதலியோர் கள் எந்த்லோக மடைவார்களோ அப் புண்ணியலோகம் அவன் கைய

தாகும். மரித்த பின்பு செய்யவேண்டியவற்றை ஒருவருய் நினைக்கு நவின்றேம் என்றருளினன்.

நான்காம் அத்தியாயம் முற்றிற்று

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

# ஐந்தாம் அத்தியாயம்.

ஸ்ரீ வியாசர் மாணுக்கர் நைமிசாரணிய வாசிகளைநோக்கி ஓ குணமாண்டோரே! கருடபகவான் திருமகள் கேள்வினைப்பணிந்து சர்வலோக சரண்யா! யமலோகம் எவ்வளவு தூரத்தி லிராநின்றது? அதன் தன்மை யாது! அவற்றைப் புகன்றருள வேண்டுமெனலும், கருணைகருணையங்கடல் கலுழனே! கோடி மனுஷ லோகத்திற்கும் யமபுரிக்கும் இடையில் எண்பத் தாறுபிர காத வழியுளது. அப்புரியில் வாழ்கின்ற கூற்றுவன் சீவகால முடிந்த சீவனைப் பிடித்து வருமாறு யாரும் அஞ்சத்தக்க உருவ முடையவர்களும், கணலேயும் காயுமசினமுடையவர்களும். பாசம் முசலம் உடையவர்களும். காரெனக்கருத்த ஆடைதரித்தவர்களும் ஆகிய மூன்று தூதர்களை யாண்டும் ஏவுகின்றுன். அம்மூவரும் சென்று ஆயுசு முடிந்த சீவனைப் பிடித்து, காற்றுருவமாகிய தேகத்தில் அடைத்துக் கொண்டுபோய் யமபுரிக்குநாயகனுகிய காலனுக்கு முன்னே நிறுத்தி ஓ தருமராஜரே! தாம் கட்டளையிட்டாங்கு வாணாளற்றவனைத் தமது சந்நிதிமுன்னர்க் கொண்டு வந்தோம். இனி யாங்கள் செய்யவேண்டிய தென்னை? கட்டளையிடுவீராயின் பணிந்து செய்கின்றேமென்பர். மகிடவாகனன் அத்தூதரைப்பார்த்து ஓ கிங்கரரே; நன்று, அச்சீவனை மீண்டும் கொண்டுபோய் அவன் மனையின் மாட்டே விடுத்துப் பன்னிரண்டாநாள் கழிந்தபின்னர்க் கிரமமாய் அவனை நமக்குமுன் கொண்டுவருக என்





சித்திரபுத்திரன்    எமதருமராஜன்    எமகிங்கரர்கள்





பிண்டகிருதியானசரீரம்        எமதூதர்கள்.

பன். தூதர் அதனைக்கேட்டு நொடிக்கு முன்னமே அச்சீவனைக்கொண்டு எண்பத்தாறாயிர காதவழி கடந்து வந்து சேருவர். இறந்தவுடனே சீவன் யமபுரிசென்று மீண்டு வருகின்றமையால், சரீரத்தை உடனே தகனம்செய்யாமல் சிறிதுபொழுது கழிந்த பின்னரே செய்தல்வேண்டும். யம தூதர்கள் அடைந்த வாயு தேகமுடைய அச்சீவன் சிதைக்குப் பத்து முழத்துக்குமேலே நின்றுதீப்பற்றிக் கொழுந்து விட்டெரிகின்ற தனது மெய்யைப் பார்த்து ஐயோ! ஐயோ? என்று ஓலமிடுவன். அச்சீவன் புண்ணியஞ்செய்தவனாயின் இவ்வுடல் கழிந்ததே நன்றென்றுவப்பன். கலுழனே. தலைவேக்குங்காலும் சீவனுக்கு அச்சரீரத்தில் ஆசையொழியாது சிரசு முதலிய தேகமெல்லாம் வெந்து சாம்பராயினவுடனே சீவனுக்குப் பிண்டத்தால் தேக முண்டாகும் புத்திரன் முதல் நாளில் போடும் பிண்டத்தால் சிரசும்: இரண்டா நாட் பிண்டத்தால் கழுத்துந் தோளும், மூன்று நாட்பிண்டத்தால் மார்பும், நான்கா நாட் பிண்டத்தால் வயிறும்: ஐந்தா நாட்பிண்டத் தால் உந்தியும் ஆறுநாட் பிண்டத்தால் பிட்டமும், ஏழாநாட்பிண்டத்தால் குகியமும் எட்டா நாட்பிண்டத்தால்தொடையும் ஒன்பதாநாட்பிண்டத்தால்காலுமுண்டாகிப் பத்தாநாட் பிண்டத்தால் சரீரமுழுதும் பூரணமாகும். சீவன் இறக்குமுன்னமேமனைவிமக்களோடுவாழ்ந்தமனைக் கண்வந்துஉள்ளே செல்லாமலேபசிதாகத்தால் ஆ ஆ! என்றுகதறிபோவோர்வருவோர்களைப்பார்த்துக்கொண்டு அவ்வீட்டின்வாயிலின்மேல் நிற்பான். பின்பு அச்சீவன் பதினொன்று நாளிலும் பன்னிரண்டா நாளிலும் புத்திரனால் பிராமணமுகமாய்க் கொடுக்கப்படுவன வற்றையுண்டு, பதின்மூன்று நாள் யமபடர்கள் பாசத்தால் பிணித்திழுக்க வீட்டைத் திரும்பித் திரும்பிப்பார்த்துக்கொண்டு கதறிய வண்ணமே யமலோகம் சார ஏகுவன் கருடனே! அக்கிங்கரர்களோடு நாளொன்றுக்கு இருநாற்று நாற்பத் தேழு காதவழி இரவிலும் பகலிலும் நடப்பன். அவன் செல்லும் நெறியில் ஈர்வாள்போன்ற இலைகளை யுடையதாகையால் அசிபத்திர வனமென்று நாமமுள்ள ஓர் கானகம் இருக்கின்றது. ஓ கருடா! மரங்கள் நெருங்கிய வனத்திற் செல்வது யார்க்கும் அரிதாகுமன்றோ? சூரியிலைகளாகிய வனத்திற் எங்ஙனஞ் செல்வது

அல்லதூஉம் அக்காட்டினூடு நடக்குங்கால் பசி தாகத்தாலும்மிக வருந்துவன் மார்க்கத்தில் சீவன் படுந்துன்பையாவர்சொல்லவல்லார்? அஃது நிற்க வைவசுவபட்டணம் உயர்ந்த மாளிகைளால் நெருங்கியதாகும்; யார்க்கும் அச்சந்தரும் கோர ரூபமுடைய அநேக பிராணிகளுக்கு இருப்பிடமானதாயும், துக்கத்தையே கொடுப்பதாயுமிருக்கின்றது. பாபஞ்செய்தோர் அநேகர் அவணிருந்து அண்டமுகடுகிழிய எப்போதும் ஆ ஆ!வென்று ஓலமிடுகின்றனர். வெப்பத்தால் உளதாகிய பேய்த்தேர் புனலுளதுபோலஆங்குக்காட்டும்பருக ஒரு சிறுதிவலையுங்கிடைக்காது. மேகங்களெல்லாம் அருந்த அருகமற்ற இரத்தம்முதலியவற்றையே பெய்யா நிற்கும். இறந்த சீவன்பதின்மூன்று நாள் புறப்பட்டு யமபுரிக்குச் செல்கின்றானென்றுமேலே புகன்றோமே. குரங்கைக் கயிற்றால் கட்டி ஈர்த்துச்செல்வதுபோலக் கிங்கரர் பத்தாநாட் பிண்டத்தால் தேகம்பெற்ற சீவனைப் பாசத்தாற் பிணித்து இழுத்துக்கொண்டு செல்லுங்கால் அச்சீவன் தனது புத்திரனை நினைத்து ஐயோ அருமைமகனே! கஷ்டப்படுகின்றேனேஎன்செய்கோ! என்செய்கோ! சர்வேசனொருவனுளன். நல்வினை தீவினையுள- சுவர்க்கநரகமுள. அவற்றிற்குச்செல்ல நன்னெறி தீநெறியுள என்று இதஞ்சொன்னவர்களோடு ஸ்ரீயப்பதியென்றும் ஒருவனுளனோ? மற்றவையுமுளவோ? பிராந்தியால்பிதற்றுகின்றீர் என்று வன்கண்மைபேசிச் சாதுக்களையேசி பரிகாசம்புரிந்தேனே அவற்றின்பலனை இப்போது அனுபவிக்கின்றேன். மலை பொருமத்திகையால் கிங்கரர் இரக்க மின்றிப்புடைக்கின்றனரே.அந்தோ பெரியோர்களுக்கு ஓர் உதவியுஞ் செய்தேனல்லேன். யாகமுதலியசெய்தேனல்லேன். செய்வோர்க்கு உதவினேனல்லேன். தீர்த்தயாத்திரை செய்தே னல்லேன். செய்வோரைப் புகழ்ந்தேனல்லேன். மாதவம்புரிந்தேனல்லேன். புரிவோரைப் போற்றினேனல்லேன். நீரில்லா இடனில் தண்ணீர்ப்பந்தர் உண்டாக்கினே னல்லேன். ஒருகுளந்தோண்டினேனல்லேன் ஒரு கிணறு கட்டினேனல்லேன் கோக்கள் மேய்வதற்குப் பசும் புல் வளரப் பயிரிடாமல் பூமியை வைத்திருந்தேனல்லேன். இயன்றமட்டில் நித்தியதானஞ் செயதே னல்லேன். வேதசாஸ்திரங்களைக் கற்றே னல்லேன். கற்போர்க்குக் கல்விச்சாலை உண்



அசிபத்திரவனம்.

டாக்கினேனல்லேன். ஸ்ரீமத் ராமாயண பாரத பாகவதங்களைக்கையா லெழுதியேனும், எழுதச்செய்தேனும், விலைக்கு வாங்கியேனும் படிக்க விரும்புவோர்க்குக் கொடுத்தே னல்லேன். அவற்றைப் படனஞ் செய்தேனல்லேன். ஒரு பெரியவர் முகமாய்க் கேட்டே னல்லேன். படிக்கவைத்துச் சர்வ ஜனங்களையும் கேட்பித்தேனல்லேன். ஸ்ரீஅரி தினமாகிய ஏகாதசியில் உபவாச மிருந்தே னல்லேன்.' இன்னன நல்வினை யொன்றனையும் கனவிலும் நினைத்தேனல்லேன். தீவினைகளிலோ ஒன்றும் ஒழியாமல் யாவுஞ் செய்தேனே. இப்போது என் செய்வேன் என்றழுது செல்வன். என்று பின்னும் அருளுகின்றனன்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

# ஆறாம் அத்தியாயம்.

சூதர் சௌனகாதி ருஷிகளைக் கண்ணுற்றுத் திருமாலடியார்களே! பின்னர்ச் சர்வேசன் பட்சி ராஜனே! யமதூதர்களால் கட்டுண்டு உதையுண்டு செல்லும் சேதநன் மனைவி மக்களோடு வாழ்ந்த இன்பை நினைந்து துன்புற்றுப் பசிதாகத்தால் வருந்தி மெலிந்து தீனசுரத்தோடு ஐயோ? நம்முடைய மனைவி மக்கள் எங்கே? உற்றார் மற்றோர்எங்கே? ஏவலாளர் எங்கே? எல்லாரும் நம்மைத் தனியே விட்டனரோ. பொய்யோலை யெழுதுதல் முதலிய தீத்தொழில் புரிந்து ¶ கவர்ந்த பொருள் இப்போது நமதுகையிலிருக்கின்றதோ? அப்பொருளை அநுபவிக்கின்ற நம்முடைய மனைவிமக்கள் சுற்றத்தாரில் யாரேனும் ஒருவர் தனியே வந்த நம்மோடு வந்தனரா? நம்மைத்தனியே விடுத்து அவர்கள் மனைக்கணிருந்து சுக மனுபவி

¶ கவர்தல் கொள்ளையிடல், திருடல், வாருதல்.

௧௧ யாம் எதுக்குப் பிறர் பொருளை வெளவினோம் ? நாம் செய்த வஞ்சனையைச் சிறிதும் அறியாமல் நம்மை நம்பிச் சீவாதாரமாகிய! பொருளை இழந்தோருடைய வயிறுபோல நம்வயிறு எரிகின்றதே என் செய்வோமென்றுதான் முன்னமேசெய்த தீவினைகளை எண்ணி ஓலமிடுவன். அப்போது யமபடர் அவனுடைய கன்னத்தில் புடைத்து அடாமூடா ? இப்போதுதான் புத்தி வந்ததோ ? மனைவி மக்களை கதியென்று அறம் செய்யாது பாபம் செய்து வாழ்ந்தனையே ? அவர்கள் நினக்கு இப்போதுசெய்யும் உதவியாதடா ? நீ செய்த புண்ணிய பாபமே நினக்கு இன்பையும் துன்பையும் கொடுக்கின்றன. பிறர்பொருளை அபகரித்தல்முதலிய அதருமம் செய்யாது தருமஞ்செய்தவனாயின்நினக்கேன் இகேடு வருகின்றது. எங்கள் கையிலகப்பட்டு ஏன் விழிக்கிறாய் என்று கோடையிடிபோல் § உரற்றி மீண்டும் பாசத்தால் விசித்துப் புடைபுடை என்று முசலத்தாற் புடைப்பர். ஓ கருடா ! தீத்தொழில புரிந்தோா அடைகின்ற கதியை நோககாய் பின்னர் அச்சேதநன் சிறிது தூரம் வாயு மார்க்கத்திலும். சிறிதும் தூரம் புவி வழியிலும் யமதூதர்களோடு சென்று ஓரிடத்திற் றங்கி இறந்த இருபத்தெட்டா நாளில புத்திரனால் செய்யப்படும் ஊனமாசிக சிரார்த்த பிண்டத்தை உண்டு முட்பநாராள் யாமியமென்ற நரகம் சேர்வன். அப் பட்டணத்தில பிரேதக் கூட்டங்கள் மிகுதியாய் இருக்கின்றன. புண்ணிய பத்திரைஎன்ற நதியும்,வடவிருக்க மொன்றும் இருக்கின்றன. சிறிது சிரமபரிகாரத்தின் பொருட்டு யம கிங்கரரது உத்தரவால அவ்யாமியமென்ற நரகத்தில் தங்கி இரண்டா மாசிகபிண்டத்தை அருந்தி, இரவிலும் பகலிலும் தூதர்களாலே இழுக்கப்பட்டு, யார்க்கும் அச்சம் தருவதாகிய அரணியத்தினூடு சென்று, வழிநடக்கும் வருத்தத்தால ஓவென்று ஓலமிட்டுத் தூதர்கள் செய்யும் கொடுமையால துன்பமுற்றுச்செல்லும் மார்க்கத்தில் திரை பக்ஷிகமாசிக பிண்டத்தை அயின்று, சங்கமனென்றும் கால தூஷகனென்றும் பெயருடைய ? ஓ ராசனுக்கும் சௌரி என்ற நரகம் சார்ந்து, அப்பட்டினத்தில மூன்றுமாசிகபிண்டத்தையுண்டு அப்புறம் சென்று, கந்தருவநகரமென்னும் பட்டினம்

§ உரற்றல பேரொலிசெய்தல்.



பிரேதக்கூட்டம்.



புண்ணியபத்திரிநதி.



எமபடர்கள் பிண்டசரீரமுடையசீவன் ஓடக்காரர்கள் வைதாணிகோவு.

சார்ந்து, அப்புரியில் நான்கா மாசிக பிண்டத்தையுண்டு, அப்புறம் நடந்து மார்க்கத்திலே பொறுக்கவொண்ணாத குளிரினும் அதிகமும் வருந்துவன். அங்கு யமதூதர்கள் அநேகர்கூடி, வருத்தும் அச்சீவன்மேலே மேகம்போலக் கற்களைப்பெய்வர். சீவன் அக்கல் மழையினால் வருத்தமுற்றுக் குரூரனென்ற நாமமுடையவேந்தன் புரக்கும் குரூரபுரமென்னும் பட்டினம் புகுந்து, அவ்விடத்தில் ஐந்தா மாசிக பிண்டத்தை உண்டு, அப்பால்நடந்து கிரௌஞ்சமென்னும் புரிக்கண் சென்று, அந்நகரத்தில் ஆறுமாசிகபிண்டத்தை அயின்று, அரை முகூர்த்தகாலம் அவணிருந்து சிறிது சிரமபரிகார மடைந்து, பின்பு எழுந்து யாவரும் அஞ்சும்படியாகிய மார்க்கத்தில் செல்வன், வழியில் செல்லும்போது முன்னே தான் வாழ்ந்ததை நினைத்து வாயாரப் புலம்புவன். யமபடர் சினந்து அவ்வாயில்புடைப்பர். அடித்தடித்து யமகிங்கரர்களால் சீவன் துன்பப்பட்டு வருந்திச் செல்லும் போதுமார்க்கத்தில் ஓடம் விடுவோர்கள் ஆயிரம், பதினாயிரம்பேர்கள் கூட்டங்கூட்டமாய் அஞ்சத்தக்க ரூபர்களாய் அச்சீவன் முன் ஓடிவந்து தீயெழ விழித்து ஏ சீவனே! வைதரணி கோதானம் நின்னைக் குறித்துச் செய்யப்பட்டதாயின், இவ்வைதரணி நதியை நீ இனிதுகடக்க உதவிசெய்வோம், இல்லாவிடின் அந்நதியில் நின்னைத் தள்ளிப் பாதாளம்வரையிலும் அழுத்தித் துன்பப் படுத்துவோம். ஓ சீவனே! அவ்வைதரணி என்ற நதி நூறுயோசனை அகல முள்ளதாயிருக்கின்றது. நீர் இன்றிச் சீ இரத்தங்களாலேயே நிறைந்திருக்கின்றது. அல்லதூஉம் தீமை புரியும் துஷ்டப் பிராணிகளுக்குத் தானமா யிருக்கின்றது. நாற்றம் அறியும் நாசியில்லாப் பிராணியும் அந் நதியின் துர்க்கந்தத்தைப் பொறுப்பது அரிது. ஏ சீவனே! நினது கையாலே நீ கோதானம் செய்தவனாயின் ஒரு கோவந்து நின்னை இந்நதிக்கப்புறம் சேர்த்து விடும். நீ செய்யாதவனாயின், ஆன் வரமாட்டாது. நீ இவ்வாற்றிலே விழுந்து நெடுங்காலம் மூழ்கிக் கிடத்தல் வேண்டும் என்பர்.

ஓ வைனதேயனே! வைதரணி நதியை இனிதாய்க் கடக்கும்பொருட்டு யாவரும் தவிராது கோதானம் செய்தல்வேண்டும்.

சீவன் ஆவ்வைதரணி கோதானம் செய்தவனாயினும், அவனைக்குறித்துப் புத்திரரால் செய்யப்பட்டதாயினும், அச்சீவன் அந்நதியைக் கடந்து நமனுக்கு இளையவனாகிய விசித்திரனென்போன் பரிபாலனம் செய்யும் விசித்திரமென்ற பட்டணத்தைச்சார்ந்து, ஊனஷாண்மாசிக பிண்டத்தை உண்டு சென்று, ஏழாமாசிக பிண்டத்தை உண்ணுங்காலை சில பிசாசுகள் வந்து அச்சீவனைப் பார்த்து அடா மூடா! நீ புவியில் வாழ்ந்தபோது நின்மாட்டு வந்து நின்னை யாசித்தவர்களை ஒன்றும் கொடேனென்று துறத்தினையே இப்போது இப்பிண்டத்தைக் கொடுவென்று பலவந்தமாய்ப் பிடுங்கிக் கொள்ளும். புள்ளரசே! ஒருபொருளு மில்லா வறிஞனாயினும், தன்னை இரந்தவர்க்கு இல்லை என்று சொல்லாது இயன்றமட்டில் ஏதேனும் கொடுத்தலே வேண்டும். கொடுக்காவிடின் புத்திரன் கொடுக்கும் பிண்டம் பிசாசுக்கையதாகும். பின்னர் அச்சீவன் வருந்தி அப்பேய் பிடுங்கியபோது தனது கையிற் சிதறிய பிண்ட சேஷத்தை உண்டு, ஐயோ கேட்டவர்களுக்கு யாசகம் கொடாமல்மறுத்த பாபத்தின் பயனோ? இது. வழிநடந்து வந்தேன் வயிறு பசிக்கின்றேன் என்றவருக்கு அரை வயிறு அன்னமேனும் கொடுத்தேனோ? சாக்காடென்பது ஒன்று நிச்சயமாய் உளது என்றுநினைத்தேனோ? என்று துக்கப்படுவன். அப்போது யமதூதர் சீவனைக் கண்ணுற்று முழுமகனே! மானிடசன்மத்தைச் சீவனுக்குவேண்டியவற்றையெல்லாம் தருவதாகிய கற்பக விருக்ஷமென்று சொல்லத்தக்கது. மானிடசன்மம் பெற்ற சீவனுக்கு அரிது யாதுளது? வேண்டிய நல்வினைகளையெல்லாம் அச்சன்மத்தால் புவியில்கொள்ளையடிக்கலாமே. அதனை அறியாது கேடுற்றனையே. மானிடசன்மத்தால் புவியில் செய்த நல்வினை தீவினைகளின் பயனை மற்றஉலகங்களில் அனுபவிக்கலாமே யலது, அவ்வுலகங்களில் ஒன்றும் செய்யக்கூடாது. உத்தம உலகடைந்து இன்பம் அனுபவித்தலும் அதம உலகடைந்து துன்பம் அனுமவித்தலும், மண்ணுலகில் சிவிகை ஊர்தலும், அச்சிவிகை சுமத்தலும் அப்பூவுலகில்செய்த புண்ணிய பாபங்களின் பயனேயென்றுணர்க. அவற்றை இப்போது உணர்ந்து என்செய்குவை என்பர். கருடனே! உதக கும்ப

தானம் செய்யப்பட்டதாயின் சீவன் அவ்வுதகத்தைப் பருகிச்சிறிது விடாய் தவிர்ந்து ஏழாமாதத்தில் அப்புறம் நடப்பன். ஏ பட்சிராஜனே! சீவன் பாதிவழி சென்றுழலுகையால் அம்மாதத்தில் பிராமணர்களுக்கு அன்னதானம் செய்தல்வேண்டும். பின்பு அச்சீவன்பக்வாபதம் என்னும் பட்டணத்தைச் சார்ந்து எட்டாமாசிக சிராத்த பிண்டத்தை உண்டு, அதனினின்று நடந்து துக்கதம் என்னும் நகரணைந்து மகாதுக்கமடைந்து ஒன்பதாமாசிக பிண்டத்தைஆங்கு அயின்று, அதனைநீங்கி நாநாக்கிரந்தமென்னும் பட்டணமண்ணி, பத்தாமாசிக பிண்டத்தை உண்பன், விருஷோச்சனம் செய்யாமைபால அநேக சீவர் பிரேத சன்மத்தோடு கூட்டங்கூட்டமாய் அப்பட்டினத்தில் எப்போதும் ஓவென்று கதறிக்கொண்டிருப்பர் அவர்களைப்பார்த்து அச்சீவனும் கதறி அப்பால்நடந்து சுதப்தமென்னும் புரியைச் சார்ந்து, பதினொன்று மாசிக பிண்டத்தை அவ்விடத்தில் அயின்றுசென்று, சீதாபரம் என்னும் நகரணைந்து, ஆங்குச்சீதத்தால வருந்தி, பன்னிரண்டா மாசிக பிண்டத்தையுண்டு அதனினின்று புறப்பட்டுச் சென்று துக்கத்தோடு நான்கு திக்கையும் யமதூதர்களை யும்பார்த்து இங்கரர் களே! என் மனைவி மக்கள் ஒருவரையும் காணேன், ஏழையேன் என்செய்வேன் என்பன். காலதூதர் சீவனை நோக்கி மூடமகனே! மனைவி மக்களிங்குளரோ? அவர்மேலாசை இன்னுமொழியவிலையோ? நீ செய்த புண்ணிய பாவங்களின் பயனையே இங்குக்காண்பாயென்று அறைகுவர், சீவன் அதனைக்கேட்டு ஐயோமுன்னே நவின்றமை மட்டாகையாலன்றோ இந்தத் துன்பத்துக்குள்ளானேனென்று மனம் புழுங்கிநடந்து; வைவசுவத பட்டினம் சேரும் முன்னரே ஊனப்திக பிண்டத்தை அருந்தி அப்பட்டினம் சார்வன். அவ் யமபுரி நூற்று நாற்பத்து நான்கு காதவழி அகலமுள்ளதாய், கந்தருவாப்சரசுகளோடு கூடியதாய், எண்பத்து நான்காயிரம்பிராணிகள் ஒருங்குற்றதாய் விளங்கா நிற்கும், சீவர்கள் செய்யும்பாபபுண்ணியங்களைத்தெரிந்து நமனுக்கு விண்ணபஞ்செய்யச் சிரவணர் என்போர் பன்னிருவர் அந்நகரில் இருக்கின்றனர். சீவரெல்லாரும் அப் பன்னிருவரையும் ஆராதித்தல்வேண்டும். அச்சிரவணரை ஆராதித்தசீவன் இறுதிக்

காலத்தில் யமபுரி சேரும்போது அவன்செய்த பாபங்க ளெல்லாவற்றையும் எடுத்துச் சொல்லாமல்புண்ணியங்களையே அச்சிரவணர் வெளிப்படுத்துவர். ஆதலால் சிரவணரை ஆராதித்தல்மிக நன்மையென்று உணர்க என்றருளினன்.

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்

—:*:*:*:—

## ஏழாம் அத்தியாயம்.

சூதபுராணிகர் சௌனகாதியரைப் பார்த்து மகருஷிகளே! கேளிர். பின்னர் இருக்கு எசு, சாமவேதங்கள் அவயவங்களாகிய கருடன் பரம காருண்ணியனாகிய எமபெருமானைத் திருவடி தொழுது எந்தையே! முன்னமே புன்றருளிய சிரவணர் பன்னிருவரும் யாருடைய புத்திரர்? வைவஸ்வதபட்டணத்தில் அன்னவர் இருப்பக்காரணம் யாது? மானிடர் செய்யும் பாப புண்ணியங்களை அச்சிரவணர் எப்படி யறிகின்றனர். அவற்றை அடியேனுக்கு நவின்றருளுக வென்று வேண்டலும், ஆதிபகவன் நன்றென்று மகிழ்ந்தது புள்ளரசே! கேண்மோ இறுதியுற்ற ஞான்று தன்னந் தனியனாகிய மகாவிஷ்ணு அய னரனாதி தேவரோடு யாரும் யாவும் தன்னுள்ளே ஒடுங்க நெடும்புனலில் பள்ளிகொண்டருளினன். அவ்விஷ்ணுவின் உந்தியினின்று நான்முகன் தோன்றி அவ்வரியைக் குறித்து நெடுங்காலம் மாதவம் புரிந்து வேகத்தையும், படைப்புத்தொழிலையும் உணர்ந்து யாவரையும் யாவற்றையும் படைத்தனன் படைத்தவுடனே உருத்திரன் முதலிய தேவரெல்லாரும் அவரவர் தொழிலில தலைப்பட்டனர். யாவரினும் வலியனாகிய தருமராஜ

னும் சையமினி என்னும் நகரமடைந்து ஆசனத்தில் உட்கார்ந்து ஜீவர்கள் செய்யும் பாப புண்ணியங்களை யறியத் தொடங்கினன். தொடங்கிய அவனுக்குச் சேதனர்கள்செய்யும் பாப புண்ணியம் தெரியாமையால் அவன் வருந்திய மனத்தோடு சதுமுகனைக்கண்டு வணங்கி ஓ மகாதேவனே ! அடியேன் சையமினு நகரடைந்து ஜீவர்களது புண்ணிய பாபங்களை யுணர்ந்து சிக்ஷை ரக்ஷைசெய்ய எத்தனித்தேன். அச்ஜீவர்கள் செய்யும் பாபபுண்ணியங்கள் இன்னவென எனக்குத் தெரியவில்லை. அவற்றை யறிந்தல்லவோ ஜீவரைக் கண்டித்தலும் காத்தலும் செய்தல் வேண்டும்.

ஆதலால் அவற்றை யான் உணரும்படி அடியேனுக்கு அருள்புரிகவென்றனன். பதுமாசனன் அதனைக்கேட்டுத் தருப்பையெடுத்தெறிந்து தேககாந்தி யுடையாரும், நீண்ட கண்ணுடையாரும், மனக்கண்ணாலே யாவற்றையும் அறிகின்றருமாகிய பன்னிரண்டு புத்திரரைப்படைத்து, நமனைப்பார்த்து ஓதருமா ! ஜீவரெல்லாரும் நினைப்பதையும், பேசுவதையும். நடத்துவதையும் ஒக்க இருக்கின்றவர்போலஇப்பன்னிருவரும் உணர்ந்து நன்கு வெளிப்படுத்துவர், அவரால் நீயுணர்ந்து, சிக்ஷை ரக்ஷை செய்தியென்று விடுத்தனன். காலன் பிரமனைத்தொழுது அச்சிரவணரோடு தென்புலம் சார்ந்து சேதனர்களது புண்ணிய பாபங்களை அறிந்து தக்கவாறு புரிவானாயினன் பக்ஷிராஜனே ! இறுதி யடைந்தவுடனே அங்குஷ்ட பரிமிதமான வாயுரூபமாகிய ஜீவனைத் தூதர் யமபுரிகொண்டு செல்வர் தருமார்த்த காமமோட்சங்கள் என்றவற்றில் தருமம்செய்த உத்தமரெல்லாரும் தருமமார்க்கமாக அந்நகரம் செல்வர். பொருள் முதலியவற்றைப் பெரியோர்களுக்குக் கொடுத்தவர் விமானங்களின்மீது செல்வர் பெரியோர்கள் விரும்பியவற்றை அவர்களுக்குக்கொடுத்தவர் கொய்யுளை குதிரைமேலேறிச்செல்வர் மோக்ஷஇச்சைகொண்டு வேதசாஸ்திரங்களை யறிந்து பத்திபுரிந்தவர் அமிசங்கள் பொருத்திய விமானத்தின்பேரில் செல்வர். இந்நான்கு விதத்திலும் சம்பந்தப்படாத பாபிகள் காலால் நடந்துசெல்வர். அவ்வழியில் மரத்தின் இலைகளெல்லாம் உடைவாளை ஒத்தனவாயிருக்கும் மணல்களெல்லாம் வறுத்து வித்திய பரல் போலுக் கிடக்கும்.

அம்மார்க்கத்தில் நடக்கும்போது அதிகம் வருத்தமுண்டாகும். ஜீவன் சிரவணரைப் பூசித்தவனாயின் அச்சிரவணர் அச்ஜீவனுடைய பாபத்தைச் சொல்லாமல் புண்ணியத்தைமாத்திரம் யமனுக்குச் சொல்வர். சிரவணரை ஆராதிகருப ஜீவனைப் பாபம் என்றும் அணுகாது. சிரவணபூசை செய்தவுடனே, பன்னிரண்டு கலசங்களில் புனலோடு அன்னம்பெய்து நிறைத்து அக்கலசங்களை அந்தச்சிரவணரை உத்தேசித்துப் பிராமணருக்குக் கொடுத்தல் வேண்டும். அப்படிக் கொடுத்த ஜீவனுக்குச் சிரவணர் யமலோகத்தில சகல நன்மையும் செய்வர். கலுழனே! சிரவணர்களுடைய தோற்ற முதல்யவற்றைச் சொல்லும் இப்புண்ணிய சரிதையைப் பத்தியோடு கேட்போன் பாபத்தினின்று நீங்கிப் புனிதனாவன் என்றருளினன்.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

## எட்டாம் அத்தியாயம்.

சூதபுராணிகர சௌனகாதி மகருஷிகளே! முதற்கடவுள் கருடபகவானைக கண்ணுற்று வைனதேயனே! ஜீவன் செய்யும் பாபபுண்ணியங்களைச் சித்திர குப்தன் சிரவணரால் உணர்ந்து, யமனுடைய உத்தரவின்படி தக்கது செய்கின்றனன். ஜீவன் வாக்கால் செய்த பாபபுண்ணியங்களை வாக்காலும், சரீரத்தால் செய்தவற்றைச் சரீரத்தாலும் மனத்தால் செய்தவற்றை மனத்தாலும் அனுபவிப்பன். பெரியோரைப் புகழ்தல் வேத சாஸ்திரங்களைப் படித்தல் முதலியவற்றைச் செய்தவன் யாண்டும் வாக்கால்வெற்றி பெறுவன் பெரியோரை இகழ்தல், நீசபாஷையை உச்சரித்தல் முதலிய பாபங்களைச்செய்தவன் வாபால் கிடம்சொரிவன். புண்

ணிய தீர்த்தமாடல், பாகவதற்குத்தண்டம் சமர்ப்பித்தல் முதலிய நல்வினை புரிந்தோன் நல்லிலக்கணமுடைய சரீரம்பெருவன். பரஸ்திரீ கமனம்செய்தல், பிறவுயிரை வருத்துதல் முதலியவற்றைப் புரிந்தவன் குரூபமான தேக மடைவன் ஆதி பகவானுடையதிவ்ய திவ்விய மங்கள விக்கிரகத்தைத் தியானித்தல், யாவருக்கும் இதத்தையே நினைத்தல் முதலியவற்றைச் செய்தவன் என்றும் உவப்புடைய மனமுடையோனவன். எப்போதும் யாவருக்கும் அஹிதத்தையே நினைத்தவன் வருந்தும்மனமுடையோனவன். ஏ கருடா! யமபுரியின் தன்மையையும். அப்புரிக்குச்செல்லும் மார்க்கத்திலுள்ள இன்பதுன்பங்களையும் நினக்குச் சொன்னேம்: இறந்தவனைக்குறித்து அன்னதானம் முதலியவைகள்செய்தல்வேண்டும். அத்தானபலனால், இறந்து செல்லும் ஜீவன் மார்க்கத்தில் வருந்தாது செல்வன். தீபதானம் செய்யின் ஜீவன் இருள் மார்க்கத்தில் வழிதெரிந்து இனிதாய்ச் செல்வன், கார்த்திகை மாதத்தில் சுக்ல பட்சத்தில் சதுர்த்தசியில் தீபதானம் செய்யின் அதனுனும்விருஷோற்சர்க்கம்செய்யின் அதனுனும் ஜீவன் நல்லுலகடைவன. பதினொன்றுநாள் செய்யும் பிண்டத்தால் சிரசு உரோம முதலியவற்றோடு நன்கு அமைவதாகும். தண்ணீர்குடம் தானம்செய்யின் யமதூதர்கள் திருப்தியடைந்து ஜீவனை வருத்தார். சையாதானம் செய்யின் ஜீவன்விமானத்தின் மேலே நல்லுலகுசேர்வன். இறந்தவன் பசி தாகத்தோடு மனைக்கு முன்னே வருந்தி நிற்பனாகையால் பதினொன்றுநாளிலேனும் பன்னிரண்டாநாளிலேனும் அவனைக் குறித்துத் தானதருமங்கள் செய்தல்வேண்டும் என்றருளினான்.

பெரியதிருவடி பக்தவற்சலனைத் தொழுது ஏ ஆதிபரமா! பததானம் செய்யவேண்டுமென்று புகன்றருளக்கேட்டேனே. பததானமாவது என்னை? அதனை எவ்விதம் கொடுத்தல்வேண்டுமென்றருளுக வெனலும், கண்ணன் கலுழனே! குடையும், மராடியும் தண்டமும் வஸ்திரமும், மோதிரமும், உதக கும்பமும், ஆசனப் பலகையும், அன்னமும், பூசாதிரவியமும், பூணூலும். தாமிரச்செம்பும், அரிசியும் ஆகியவற்றைச் சற்பிராமணருக்குக் கொடுத்தல் வேண்டும். குடை தானம் செய்யின் ஜீவன் யமபுரிக்குச் செல்லுங்

யோடு கூடியதுமாகிய தேகம் எல்லாப் பிராணிகளுக்கும் உற்பத்தியாய் உளதாகும், சமஸ்த லோகங்களும் சமஸ்த தேவர்களும் தேகத்தில் இருக்கின்றனர் என்றருளினன்.

—(*)—

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

—:*:—

## இருபதாம் அத்தியாயம்.

—)-(*)-(—

சூதபுராணிகர் நைமிசாரணிய வாசிகளே! கருடபகவான் பரமபதநாதனைத் தொழுது, சர்வலோக சரணியா! தோல், நரம்பு, எலும்பு, இரத்தம், மாம்சம், தலை, கை, கால், நா, நாசி, இரகசியப் பிரதேசம், நகம், மயிர், முதலியவைகளால் பரவப்பட்டு இந்திர சாலம் போலத் தோன்றுகின்ற சரீரம் எங்ஙனமுண்டாகின்றது? சாதித்தருளல்வேண்டும் எனலும், உலகம் யாவையும் படைத்தவனைப் படைத்த பரந்தாமன் காசியபதனயா - நன்குகடாவினை. விஸ்தாரமாய்ச் செப்புகின்றும். பயிஷ்டையான பெண்கள் நான்கு தினவரையிலும், மனைக்குப் புறம்பே இருத்தல்வேண்டும். முன்னொரு காலத்தில் தேவேந்திரன் விருத்திராசுரன் என்றவனைக் கொன்றமையால், அவனைப் பிரமகத்திதோஷம் பிடித்தது. அவ்விந்திரன் பிரமனை வணங்கி அடியேன் உறு துயரை நீக்குதி என்று இரத்தலும். அப்பிரமதேவன் மகபதியைப் பிடித்த பிரமகத்தி தோஷத்தை நான்கு பாகமாய் பகுப்புசெய்து ஒரு பாகத்தை ஸ்திரீகளுக்குக் கொடுத்து ரசஸ்வலையாகும்போது அப்பெண்கள் மாட்டு அத்தோஷம் அணுகுமாறு நியமித்தனன். ஆதலால் பயிஷ்டையான ஸ்திரீயை நான்கு தினவரையிலும், ஒருவரும் பார்க்கவுமாகாது. பார்த்தால் மகாபாவம் வந்தடையும். பயிஷ்டையானவள் முதல்நாள் சண்டாளஸ்திரீயைப்போல்வாள். இரண்டாநாள் பிரமஹத்தி செய்தவளையொப்பா

வாள். மூன்றுநாள் ஆடை ஒலிப்பாளைப் போல்வாள். நான்காநாள் புனலாடிய பின்பு சிறிதுபரிசுத்த ளாவள். ஐந்தாநாள் கிருக கிருத்தியங்களுக்கெல்லாம் உரியளாய்ச் சுத்தளாவள். பயிஷ்டையான ஆறு நாள்முதல் பதினெட்டுநாள் வரையிலும் உள்ள இரட்டைநாள் ஏழில் இரவில் புணர்ந்தால், புருஷப் பிரஜைபுண்டாகும். ஐந்துதினமுதல் பதினெட்டுத் தினம்வரையிலுமுள்ள ஏழு ஒற்றைநாளில் புணர்ந்தால், ஸ்திரீ பிரஜை யுண்டாகும், ஆதலால் ஆண்மகவு பெறவிரும்பினவன் தன்மனைவியை இரட்டை நாளிலேயே சேர்த்தல்வேண்டும். நான்கு தினத்துக்குமேல் பதினெட்டு நாள்வரையிலும், இராக்காலத்தில் இரட்டைநாளில் கருப்பம் தரித்தால்குணவானுக்வும், ஐசுவரியவானுகவும், தர்மிஷ்டனுகவும், ஸ்ரீ விஷ்ணுபக்தி யுடையவனுகவும்,புத்திரன் பிறப்பான். பயிஷ்டையான நான்கு திவசத்துக்குமேல் எட்டுநாட்குள்ளே பெரும்பான்மை கருப்பம் தரிக்கும் ரசஸ்வலையான ஐந்தாநாள் ஸ்திரீகள் பாயசம் முதலாகிய மதுர பதார்த்தங்களையே புண்ணுதல்வேண்டும். காரமான பதார்த்தங்களை அருந்தலாகாது. ஸ்திரீபுருஷர்கள் சந்தனம் புஷ்பம் தாம்பூலமாகிய குளிர்ந்தவஸ்துக்களைத் தாரணம்செய்து கொண்டு குளிர்ந்த மெய்யினர்களாய், சித்தத்தில் அதிகமோக முடையவர்களாய்ச் சேர்தல்வேண்டும். அங்ஙனம் இருவரும் சேரின், சுக்கில சோணிதங்களால் ஸ்திரீவயிற்றில் கருத்தறித்துச் சுக்கில பக்ஷத்துச் சந்திரன்போல அக்கரு விருத்தியாகும். மன்மதனும், மனமும், ஒத்தகாலத்தில் இருவராலும் விடப்படும் சுக்கில சோணிதங்களில், சுக்கிலம் அதிகமானுல் ஆண்மகவும், சோணிதம் அதிகமானுல் பெண்மகவும் பிலக்கும். சுக்கில சோணிதங்களிரண்டும், ஏற்றக்குறைவின்றிச் சமமானு அலிமகவு பிறக்கும். கருத்தரிக்குமாயின் புணர்ந்த ஐந்து திவசத்தில் கருப்பப்பையுள் ஒரு குமிழி யுண்டாகின்றது. பதினுன்குநாளில் அது சிறிது தசையால் பெருக்கிறது. இருபதாநாளில் பின்னும் சிறிது தசை உண்டாகின்றது. இருபத்தைந்தாநாளில் பின்னும் சிறிது புஷ்டியாகின்றது. ஒரு மாதத்தில பஞ்ச பூதங்களின் சேர்க்கை யுண்டாகின்றது. இரண்டா மாதத்தில் தோல் உண்டாகின்றது. மூன்றுமாதத்தில் நரம்பு உண்டாகின்றது. நான்கா மாதத்தில் மயிரும் புறவடியும் உண்டாகின்றன. ஐந்தாமாதத்தில் காதும், மூக்கும், மார்பும் உண்டாகின்றன. ஆறுமா

கத்தில் கழுத்தும், சிரசும், பல்லும் உண்டாகின்றன. ஏழாமாதத்தில் ஆண்மகவாயின் ஆண்குறியும், பெண்மகவாயின் பெண்குறியும், உண்டாகின்றன, எட்டாமாதத்தில் எல்லா அவயவங்களும், உண்டாக்கிச் சீவனும் பிரவேசிக்கின்றான். ஒன்பதா மாதத்தில் சீவன் சுழுமுனையென்னும் நாடியின் மூலத்திலிருந்து பூர்வசன்ம கருமங்களை நினைத்துச் சன்மம் வந்ததைக் குறித்துத் துக்கித்துப் பத்தாமாதத்தில் பிறக்கின்றான்.

கருடா! பஞ்சபூதாத்மகமாகிய தேகம் பஞ்சேந்திரியங்களுற்றும், பத்துநாடிகளால் அலங்கரிக்கப்பட்டும், பிராண, அபான, வியான, உதான, சமான, நாக, கூர்ம, கிருகர, தேவதத்த, தனஞ்சய என்னும் பத்து வாயுக்களோடு கூடியும் இராநின்றது. அல்லாதுஉம் அச்சரீரம் சுக்கிலம், எலும்பு நீர், மயிர், அரத்தம் என்னும் ஆறு கோச முடையதாகியும் இராநின்றது. நரம்புகளினால் கட்டப்பட்டிருக்கும் ஸ்தூலசரீரத்தில் தோலும் எலும்பும் மயிரும் மாம்சமும் உகிரும், பிரிதிவினது குணமாகின்றன. வாயில் உண்டாகின்ற நீரும், மூத்திரமும், சுக்கிலமும், ஊனீரும், புண்ணீரும், அப்புவினது குணமாகின்றன. பசியும் - தாகமும் - நித்திரையும் சோம்பலும் காந்தியும் தேயுவினது குணமாகின்றன. இச்சையும்- கோபமும்- வெட்கமும் - பயமும் - மோகமும் - அங்குமிங்கு மோடுதலும் - சுழலுதலும் கை கால மடக்குதலும் - நீட்டுதலும், ஒருவினை செய்யாமலேயிருத்தலும், வாயுவினது குணமாகின்றன. சப்தமும் - எண்ணமும்- கேள்வியும் - கம்பீரமும் - சந்தியமும் - ஆகாயத்தினது குணமாகின்றன. காதும் - கண்ணும் - மூக்கும் - நாவும் தொக்குமாகிய ஐந்தும் ஞானேந்திரியங்க ளாகும், இடை - பிங்கலை - சுழுமுனை - என்னும் மூன்று பெரியநாடிகளும். காந்தாரி - கஜசிம்மை - பூஷை - யசசு - அலாபு - குகு - விசாகினி என்னும் ஏழு நாடிகளும் சரீரத்தில் முக்கியநாடிக ளாகின்றன. சீவன் உண்ணும் சோறு முதலியவற்றை மேற்சொன்ன வாயுவே அந்தந்த இடங்களில் சேர்க்கின்ற. வயிற்றில் அக்கினிக்கு மேல் புனலும், அப்புனலுக்குமேல அன்னமும் இருக்கின்றன. அவ்வக்கினியை வாயு ஊதி விருத்திசெய்யா நின்றது. சரீரமானது மூன்றரை கோடி ரோமங்களும் முப்பத்திரண்டு பற்க

ளும், இருபஃது உகிர்களும், இருபத்தேழுகோடி தலைமயிர்களும், ஆயிரம் பலம் தசையும், நூறுபலம் இரத்தமும், பத்துப்பலம் மேதசும்பற்றுப்பலம்தொக்கும், பன்னிரண்டுபலம் மச்சையும் மூன்றுபலம் முக்கிய இரத்தமும் - சபமும் - மலமும் - மூத்திரமும் - கூடி மூடிநிற்கின்றது. அண்டத்தி லுள்ளவையெல்லாம் தேகத்தி லிருக்கின்றன. உள்ளங்கால் அதலமென்றும், கணைக்கால் விதலமென்றும் முழந்தாள் சுதலமென்றும், அதற்குமேல் நிதலமென்றும், ஊரு தலாதலமென்றும், குய்யம் ரசாதலமென்றும், இடை பாதாளமென்றும், நாபி பூலோகமென்றும், வயிறுபுவர்லோகமென்றும், இருதயம் சுவர்லோகமென்றும், தோள் மகோலோக மென்றும், முகம் ஜனோலோகமென்றும், நெற்றி தபோலோக மென்றும், சிரசு சத்தியலோகமென்றும், சொல்லப்படும். திரிகோணம் மேருகிரியென்றும் கீழ்க்கோணம் மந்தர பருவதமென்றும், அக்கோணத்துக்கு வலப்பக்கம் கைலாயமென்றும், இடப்பக்கம் இமாசலமென்றும், மேற்பாகம் நிஷேத பருவதமென்று, தென்பாகம் கந்தமாதனமென்றும், இடது உள்ளங்கையிலுள்ள ரேகை வருணபருவதமென்றும் சொலலப்படும் எலும்பு நாவலந்தீவு என்றும், மேதசு சாகந்தீவு என்றும், தசை குசைத்தீவு என்றும், நரம்பு கிரௌஞ்சத்தீவு என்றும், தொக்கு சாலமலித்தீவு என்றும், மயிர்த்திரள் பிலக்ஷத்தீவு என்றும், உகிர புஷ்கரத்தீவு என்றும், சொலலபபடும். மூத்திரம் உப்பு வேலையென்றும், நீர் பாற்கடலென்றும், கபம் சுரா சிந்துவென்றும், மச்சை நெய்ச்சமுத்திரமென்றும், வாய்நீர் கருப்பங்கடலெனறும், இரத்தம் தயிர்வேலையென்றும், வாயிலுண்டாகும் மதுரப் புனல சுத்தோதக சிந்துவென்றும் சொல்லப்படும். சரீரத்தில இரண்டு சக்கரங்களுள். அவற்றில் நாதசக்கரத்தில சூரியனும், பிந்து சக்கரத்தில சந்திரனும், நேத்திரங்களில் அங்காரகனும், இருதயத்தில புதனும், வாக்கில் சுரகுருவும் சுக்கிலத்தில சுக்கிரனும், நாபியில் சனியும், முகத்தில் ராகுவும், கால்கேதுவும் இருக்கின்றனா. ஏ கருடா! மனிதனுடைய சரீரத்திலே பதினான்கு லோகங்களும், சப்தகுலாசலங்களும், தீவுகளும், நவக்கிரகங்களும், இராநின்ற வகையைச் சொன்னோம். சீவன் கருப்பவாசம் செய்யும்போது தானே அச்சீவனுக்கு ஆயுசு இவ்வளவென்றும், இன்னவித்தை இவ்வாறென்றும், போகமும் யோகமும்

இவ்வளவென்றும், இன்னகாலத்தில் இன்னவிதமாய் மரணமுண்டா கத் தக்கதென்றும், பூர்வகருமத்தை யனுசரித்து பிரமன் விதிக்கின்றனன். ஆகையாலே தீர்க்காயுளும் உயர்ந்த வித்தையும்- போகமும் - யோகமும் மற்றயாவும், மறுசன்மத்தில் ஒருங்கெய்தும்பொருட்டுச் சீவன் நற்கருமங்கள் செய்தல்வேண்டுமென்று சாஸ்திரஞ்சாற்றுகின்றது. சீவன் பூர்வசன்மத்தில் செய்த கருமபலனையே மறுசன்மத்தில அடைகின்றனன் என்பதில் ஐயப்பாடு சிறிதும் இலது கருடா! உலகநன்மையின் பொருட்டு நினக்கு யாவும்புகன்றேம். இன்னும் வினவுவதுளதேல் அதனையும் செப்புகின்றோம் என்று திருவாய் மலர்ந்தருளினன.

———:(*):———

இருபதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

——(*)——

# இருபத்தொன்றாம் அத்தியாயம்.

——:(*):——

சூதர் சௌனகாதி மகருஷிகளைநோக்கி, ஸ்ரீ ஹரிதாசர்களே! பகவான் அங்ஙனம் செப்பலும், வேதவுருவனாகிய கருடபகவான் கண்ணனை நதொழுது, எசாவ சுவாமி! யமபுரி யாண்டையது? அப்புரிக்குச் செலலும் மார்க்கத்தின் பெற்றிமையை அடியேனுக்கு மீண்டும் விஸ்தாரமாயச் சாற்றதருளலவேண்டும் என்று பிரார்த்தித்தலும், அயனரனுங்கரிய எம்பிரான, கலுழனைப்பார்த்து வைனதேயா! முன்னமே அதன் பெற்றிமையை நவின்றிருக்கின்றோம். நீ வினவினமையால், எஞ்சியவற்றை இப்போது புகலுகின்றோம். கேட்டி. நமன் புரிக்குச் செலலும் மார்க்கத்தில சில பாகம் உருக்கிவிட்ட செம்புபோலக காந்திகொண டிராநின்றன. சில பாகம் இண்டமுட்களாலும், தீக்கொள்ளிகளாலும், நிறைந்திராநின்றன. சில பாகத்தில் பொறுக்க வொண்ணாத குளிர் இராநின்றது. பூலோகத்திற்கும் யமலோகத்திற்கும், எண்பத் தாறாயிரங் காதவழியுளதென்று

முன்னமே சொன்னேனே! அத்தனை காதவழியிலும், பாபஞ்செய்த ஜீவனுக்கு மரத்தினிழலும், பருக நீரும், சிறிதுங்கிடைக்கா. பாபிகளுக்குயமலோகமும் அதற்குச் செல்லும் மார்க்கமும் மிக்க கொடுமையாகவே இராநின்றன. ஓ கருடா! இனி யமலோகத்தின் தன்மையைச் சொல்லுகின்றோம். தென்றிசைக்கும், நிருதி திசைக்கும், நடுவில் யமபுரி வச்சிரமயமாயும், தேவர் அசுரர் முதலியோரால் சிதைக்கத் தகாததாயும் இராநின்றது. அப்பட்டணத்து நடு சதுரமாய் நூறுயோசனை விஸ்தாரமுள்ளதாயும், இருபத்தைந்து யோசனையுயரமுள்ளதாயும் அநேக சாளரங்கள் உடையதாயும், துகிற்கொடிகளாலும், முத்துக் கோவைகளாலும், தோரணக்களாலும் அலங்கரிக்கப் பட்டதாயும், சுவர்ணமயமாயும், தர்மராசனுடைய அரண்மனை இருக்கின்றது. அந்த அரண்மனையுள் பத்துயோசனை அகல நீளமுள்ளதாயும், அநேக ஆயிரம் வைரத்தூண்கள் உற்றதாயும் சைத்திய சௌரப்பியமுள்ளமென் காற்று இயங்குவதாயும் எப்போதும் ஆடலும் பாடலும் உடையதாயும் ஒரு திவ்வியமண்டபம் இராநின்றது. அம்மண்டபத்தில் தூதர்கள் கரங்குவித்து ஓர்புறம் நிற்கவும் ரோகங்களெல்லாம் கோர ரூபத்தோடு அவ்வாறே ஒருபுடை நிற்கவும் கண்டவர் அஞ்சும்படியாகிய ரூபத்தோடும் உவப்போடும் சமன் வீற்றிருக்கின்றனன். அவன் வீற்றிருக்கும் அம்மண்டபத்தின் பக்கலில் இருபத்தைந்து யோசனை அகல நீளமும், பத்துயோசனை உயரமும் உள்ளதாய் பலவித அலங்காரமுடையதாய் சித்திரகுப்தனுடைய அரண்மனையிருக்கின்றது, அந்த மனையில் ஒரு திவ்விய மண்டபத்தில் சித்திரகுப்தன் வீற்றிருந்து சமஸ்த ஜீவர்கள்செய்யும் பாபபுண்ணியங்களைச் சிறிதும் விடாமல் கணக்கெழுதுகின்றான், அவன் எழுதுவதில் சிறிது பிசகும் உண்டாகாது அச் சித்திரகுப்தனுடைய அரண்மனைக்குக் கீழ்ப்புறத்தில் சுரத்துக்கும், தென்பக்கத்தில் சூலையோடு வசூரிக்கும், மேற் பக்கத்தில் காலபாசத்தோடு அசீர்ணத்துக்கும் அருசிக்கும், வட பக்கத்தில் வயிற்றுவலிக்கும், வடகிழக்கில் தலைவலிக்கும், தென்கிழக்கில் மயக்கத்துக்கும், தென்மேற்கில் அதிசாரத்துக்கும், வடமேற்கில் சன்னிக்கும் கிருகங்கள் இருக்கின்றன. அந்த ரோகங்களெல்லாம் யமனுடைய உத்தரவை எதிர்பார்த்துக்கொண்டு அம்மனைகளில் வசிக்கின்றன.




ஔதும்பரன் படன கிங்கரன

சிலாக்கையிலகொததி அக்கினியிலவாட்டல்




சம்பரன் செக்கு சார்தூலன சணடாமிருகன்





தூதன் பேடுதல் தூதன் கண்டாககோடாலியில்

பரபுருஷனைசேர்ந்தவள் கழுவில் வெட்டுதல்

ஏ கருடா! அவ்யமனுடைய அரண்மனைக்குத் தென்பக்கத்தில் பாபஞ்செய்த சேதனர்களைத் தூதர்கள் பலவிதமாய் இம்சிக்கின்றார்கள் சில சீவரை உலக்கையால் புடைக்கின்றனர். சிலரை ஆயுதங்களினால் சிதைக்கின்றனர். சிலரைச் சுரிகையால் சீவுகின்றனர். சிலரைச்செக்கில்போட்டு அரைக்கின்றனர். சிலரை இருப்புச் சலாகையிற் கோத்துப் பெருந்தழலில வாட்டுகின்றனர். வைனதேயா! ஒரு ஆண்பாவையும், ஒரு பெண்பாவையும், செம்பினால் செய்யப்பட்டு அக்கினியால் எப்போதும் தப்தமா யிருக்கின்றன. தூதர்கள் பரஸ்திரீ கமனஞ்செய்த சீவர்களைநோக்கிப் பாபிகாள்! தருமமும் மானமும் பாராமல் பிறர்மனைவியரைப் புணர்ந்ததற்கு வந்த பயன் இஃதென்று அதட்டிச்சொல்லி அப்பெண் பாவையோடு ஒன்றுசேர்ப்பர். பரபுருஷனோடு சேர்ந்த ஸ்திரீகளையும், அவ்வாண்பாவையோடு அங்ஙனமே சேர்ப்பர். விநதை புத்திரா? புருஷன் தனதுஸ்திரீயை யன்றிப் பரஸ்திரீயைப் புணர்வதற்கும், ஸ்திரீ தனது புருஷனையன்றிப் பரபுருஷனைக் கூடுவதற்கும், யமலோகத்தில் உளதாகிய தண்டனையைப்பாராய். இங்ஙனம் கொடிய தண்டனையுளதா யிருக்கவும், ஸ்திரீ புருஷர்களில் நல்லொழுக்கத்தில நிற்போரைக் காண்டல் அரிதாயிருக்கின்றதே சிலரைக் கரும்பைப்போல ஆலையில் கொடுக்கின்றார்கள். சிலரை நரகங்களில் தள்ளிப் பாதாளங்காறும் அழுத்துகின்றார்கள். கடன் வாங்கி மீண்டும் கொடாதசீவரைக் கொடுத்தவனுக்குக் கடனைக் கொடாமல், வன்கண்மை பேசினீரே என்று முனிந்து புடைக்கின்றனர். பாபிகள்படுந் துயரை விரித்துச்சொல்லுதலால் பயன் என்ன? இன்னான் தருமிஷ்டன், இன்னான் அதருமிஷ்டன், இன்னான் சுவர்க்கம் புகுகின்றவன், இன்னான் நிரயம்புகுகின்றவன்என்று அவரவர் ஒழுக்கத்தாலே உணரலாகுமே. தருமஞ்செய்தவனே சுவர்க்கம் புகுவானென்பது திண்ணமாகலால யாவரும் தருமமே செய்தல் வேண்டும் என்றுகூறிப் பின்னும் அருளுகின்றனன்.



இருபத்தொன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

# இருபத்திரண்டாம் அத்தியாயம்.

சூதர் மகாமுனிவர்களே! கேண்மின் அகாரவாச்சியன் வேத வுருவனைப் பார்த்துக் கருடா! சிலதருமங்களைச் சொல்லுகின்றோம் கேண்மோ. மானிடர் கிருதயுகத்தில் மாதவம்செய்தல் உத்தமமாயது திரேதாயுகத்தில் தியானம்செய்தல் உத்தமமாயது. துவாபரயுகத்தில் யாகாதிகள்செய்தல் உத்தமமாயது. கலியுகத்தில் தானம்செய்தலே உத்தமமாயது. இல்லறத்தி லிருக்கின்றவனுக்கு எந்த யுகங்களிலும் யாகாதி கருமங்கள் செய்தலும், கோயில். குளங்கள். சத்திரம் - தோட்ட முதலியவற்றை உண்டாக்கித் தருமம் செய்தலும், அதிதி யாராதனம் செய்தலுமே உரியவாகும். இல்லறத்தி லிருக்கின்றவன் தனது தாயாதிகளில் யாரேனும் மரித்தால் அவனைகுறித்துத் தருப்பணம் செய்தல்வேண்டும். மாய்ந்தவன் அப்புனலைப் பெற்று மகிழ்கின்றான். மூன்று சிறுகற்களை கயிற்றினால்கட்டி நாற் சந்தியில் இறந்த தினமுதல் மூன்றுநாள் இராவில் எரிதல்வேண்டும். சஞ்சயனம் செய்தபின்பு தாயத்தார் எல்லாரும் மாண்டவனுக்குத் தருப்பணம் செய்தல்வேண்டும். முதல் மூன்று வருணத்தாராகிய பிரம - க்ஷத்திரிய - வைசியருக்குச் சூத்திரன் தருப்பணம் செய்யலாம். பிரம க்ஷத்திரியருக்கு வைசியன் செய்யலாம். க்ஷத்திரியன் பிராமணனுக்குச் செய்யலாம் பிராமணன் தன் மரபோர்க்கன்றி மற்ற குலத்தாருக்கு ஒன்றும் செய்யலாகாது. சூத்திர சவத்தோடு பிராமணன் சுடுகாட்டுக்குப் போனால், அப்பார்ப்பானுக்கு மூன்று நாளைக்கு ஆசௌசமுண்டு, மூன்றுநாள் கழிந்த பின்னர் அவ்விப்பிரன் காவேரி ஸ்நானம்செய்து சுத்தனாதல்வேண்டும். மாய்ந்தவனுக்குக் கருமம் செய்கின்றவன் பஞ்சணையில் சயனிக்கலாகாது. இறந்தவனுடைய நற்குணங்களை எப்போதும் மிகுத்துரைத்தல்வேண்டும். யமனைக்குறித்தும் ஸ்தோத்திரம் செய்தல்வேண்டும். பத்துநாட்களில் போடப்படும் பிண்டங்களாலே துஞ்சினவனுக்குச் சரீரமுண்டாகின்றமையால், பத்துநாட் கிரியையும் தவிராது செய்தல் வேண்டும். •பத்து நாட்கிரியை செய்யாவிடின் மாய்ந்தவன் சரீரம்

பெறுமல் வருந்துவன். தனுர்வேத முணர்ந்த ஒருவில்லாளன் குறிவைத்து வாளியெய்வானேல், அவ்வாளி அக்குறியில் பிழையாது தைக்குமாறுபோலக் கலைகளுணர்ந்த சற்புத்திரன், மரித்த தாய்தந்தையரைக் குறித்துச் செய்யும் கருமபலன் அவரைத் தவிராமல் அடையும், மரித்தசீவன் மூன்றுநாள் நீரிலும், மூன்றுநாள் அக்கினியிலும், மூன்றுநாள் ஆகாயத்திலும், ஒருநாள் கிருகத்திலும், வசிப்பன். முதல் நாளிலும், மூன்றுநாளிலும், ஐந்தா நாளிலும், ஏழா நாளிலும், ஒன்பதா நாளிலும், பதினொன்று நாளிலும், நவசிராத்தம் செய்தல் வேண்டும். முதல்நாளில் எந்த இடத்தில் தருப்பண முதலியவை செய்யப்பட்டனவோ அந்த இடத்தில் தானே பத்துநாளும் செய்தல்வேண்டும். பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரில் எக்குலத்தாருக்கு எத்தனைநாள் ஆசௌசம் விதிக்கப் பட்டதோ அத்தனைநாளும், பிண்ட தருப்பணம் அவசியம் செய்தல் வேண்டும். எந்தத் திதியில் மரிக்கின்றானோ? அந்தத் திதியில் மாசிகம் செய்தல் வேண்டும். பதினொன்றுநாள் பலகாரத்தோடு சோறமைத்து நாற்சந்தியில் கொட்டி, ஸ்நானம் செய்தல் வேண்டும். அதிகவருத்தப்பட்டு ஒருவன் மரிப்பனேல் அவனைக் குறித்து ஏகோதிஷ்ட சிராத்தம் விசேஷமாய்ச் செய்யப்படுமாயின் அவன் வருத்தம் நீங்கி இன்புறுவன். அந்த ஏகோதிஷ்ட சிராத்தம் க்ஷத்திரியன் பன்னிரண்டா நாளிலும், வைசியன் பதினைந்தா நாளிலும் செய்தல் வேண்டும். தாய் தந்தையர் மரிப்பினும். மகவு பிறப்பினும் சூத்திர குலத்தாருக்கு ஒரு மாதம் வரையினும் ஆசௌசம் உண்டு. அரை மாதம் உளதென்பதும் ஒரு பட்சமுண்டு. சூத்திரன் பதினைந்தா நாளுக்கு அப்புறம் ஏகோதிஷ்டம் செய்தல் வேண்டும். ஒருவன் மரித்தால் பத்துநாள் தீட்டுடைய அவனுடைய தாயத்தான் தூரம் முடிந்தபின்பு மூன்று மாதத்திற் குட்பட்டு எப்போது கேட்பினும் அத்தாயத்தானுக்கு மூன்றுதினம் சூதகம் உண்டு. மூன்று மாதத்திற்குமேல் ஆறுமாதத்திற் குட்பட்டுக் கேட்பனேல் தொண்ணூறு நாழிகையுண்டு. ஆறு மாதத்திற்குமேல் ஒரு வருஷத்திற்குள் கேட்பனேல் ஒருதினமாத்திரம் உண்டு. வருடம் முடிந்தபின்பு கேட்பனேல் கேட்ட உடனே ஸ்நானம் மாத்திரம் செய்தல் வேண்டும். இவ்விதி எல்லா வருணங்களுக்கும் பொதுவாகும்.

வீநாயகா ? சய்யாதானம் செய்யவேண்டு மென்று, மூன்னமே ஓதினேமே? எந்தப்புருஷனும் அத்தானத்தைத்தனதுகையாலேயே செய்தல் வேண்டும். நல்லமரத்தில் கட்டில்செய்து சொன்னத்தாலும், வெள்ளியாலும் பூண்கள்கட்டி, முத்துமாலைகளாலும், நறுமலர்த் தொடையல்களாலும், அக்கட்டிலை அலங்கரித்துப் பாயல்விரித்துத் தீபமும். சந்தனமும் - புஷ்பமும் - தாம்பூலமும், பின்னும் நறுநாற்றமுடைய மற்றையவும், நீருடன் செம்பு ஸ்தாலியும், அலங்காரார்த்த மாயும், வீலார்த்தமாயும் ஸ்திரீ புருஷர்களுக்கு வேண்டியவும், அக்கட்டிலில் வைத்து நவக்கிரகங்களைப் பூசித்துச் சிவன்முதலாகிய தேவர்களும், பார்வதிமுதலாகிய தேவஸ்திரீகளும், லட்சுமி நாராயணனும் இந்தச்சய்யாதானத்தால் திருப்தியடைதல் வேண்டுமென்று சொல்லி, யோக்கியனாயும், குடும்பியாயுமுள்ள உபாத்தியாயனுக்குத் தானம்செய்து அவனைவலம்வந்து தண்டம் சமர்பித்தல் வேண்டும் என்றருளினன்.



இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீராமநாதர்கள் திருவடிகளே சரணம்.

# இருபத்துமூன்றும் அத்தியாயம்.



சூதபுராணிகர் மாதவர்களை நோக்கி முனி சிரேஷ்டர்களே! கேண்மின். பின்னர்ப்பெரிய திருவடி புராரிவணங்கும் முராரியைத் தொழுது.ஸ்ரீ சர்வேசா! தாயைப்பெற்றவளும் அவளைப்பெற்றவளும், அவளைப் பெற்றவளும், தந்தையைப் பெற்றவனும், அவனைப் பெற்றவனும், அவனைப் பெற்றவனும், உயிரோ டிருக்குங்கால் தாயேனும் தந்தையேனும் இறப்பின், புத்திரன் எங்ஙனம் பிண்டம் சேர்த்தல் வேண்டும், நவின்றருளுக வென்னலும், ஸ்ரீ தரமூர்த்தி வைனதேயா! தாய் தலை முறையிலும், தந்தை தலைமுறையிலும், உயிரோ டிருப்

பவர்களுக்கு மேலே மூன்று தலைமுறைப் பிதிரர்கள் பிண்டத்தோடு இறந்தவர் பிண்டத்தைச் சேர்த்தல் வேண்டும். பின்பு மூன்றும் பிதிரர் மூன்றுபேர். நியாசகர் மூன்றுபேர். லேபகர் மூன்றுபேர். பிண்டம் போடும் பந்தியில் வருவோன் ஒருவன். இங்ஙனம் தந்தை மரபில் பத்துப்பேர்களும், தாய்மரபில் பத்துப்பேர்களும் உளர். ஒருவன் மரித்துப் பிதிரரோடு சேர்தலும், நான்காம் பாட்டன், முதல் நியாசகனாகின்றான். மூன்றாம் நியாசகன், முதல் லேபகனாகின்றான். மூன்றாம் லேபகன், பந்தியில் வருவோனாகின்றான். பந்தியில் வருவோன், வாராமல் ஒழிகின்றான். புத்திரன் சிராத்தம் செய்கின் தந்தை சந்தோஷித்து அப்புத்திரனுக்குப் புத்திரன் கொடுக்கின்றான். பாட்டன் கோ முதலிய பொருள்களைக் கொடுக்கின்றான். சிராத்தம் செய்தலில் பிதிரர்க்குத் திருப்தி யுண்டாவது மட்டுமின்றி செய்கின்றவனுக்கும் மிக்க பலனுளது. அவிட்டம் முதல் ரேவதி வரையில் உள்ள ஐந்து நாட்கள் சிரேஷ்டமானவை யல்ல. அவ்வைந்து நக்ஷத்திரங்களில் மரிக்கின்றவனுக்கு உடனே சமஸ்காரமுதலிய கிருத்தியங்கள் செய்யலாகா. அந்த நக்ஷத்திரங்கள் கழிந்த பின்பே செய்தல்வேண்டும். இவ்விதியை ஒருபக்ஷமாகக்கொள்க. உயிர் நீங்கிய பின் தேகத்தை வைத்திருக்க சிறிதும் அவகாசமில்லாவிடில், உடனே சமஸ்காரம் செய்தலேவேண்டும். தனிஷ்டா பஞ்சகத்தில் இறந்த தோஷ நிவர்த்தியின்பொருட்டுச் சாஸ்திரத்தில் சொல்லியபடி சில கருமங்கள் அதிகமாய்ச் செய்தல் வேண்டும். பெற்றோர்கள் ஐந்து நக்ஷத்திரங்களிலும், இறந்தவர் நற்கதியடையார். ஆகலால் எள்ளு கோவும் இரணியமும் நெய்யும், தானம் கொடுத்தல்வேண்டும். தனிஷ்டாபஞ்சகத்தில் மாய்ந்தவருக்குச் சாஸ்திரம் சொல்லியபடி செய்யாவிடின் கருமம்செய்யும் கருத்தா துன்பமடைவன். பிரேதத்தை யுத்தேசித்துச் செய்யப்படும் சிராத்தத்தில், பிராமணர் ஆசீர்வதித்தலும், அன்னவர் க்ஷேமம் கேட்குதலும் இரட்டைக் குசைகளும் பவ வமும் ஓமமும் எச்சிலை நாய் நுகர லாகாதென்ற விதியும் சேஷத்தை யுண்ணலும், விகிரமும், ஸ்வதா என்கிற சப்தமும், பிதிர்சப்தமும் உடன் சொல்லுதலும் ஆவாகனமும், நமஸ்காரமும் எல்லை வரையில் பின் செல்லுதலும், மங்களருதலும் சம்பிரதாயப்படி புண்டரம் தரித்தலும், அக்கினியில் பூரண

னித்தவாறே மரிக்கின்றனனோ ? அவன் நல்லுலகு சார்வன். அதனாலே
அப்பிராயோபவேசம் ஏற்றமுடையதாயிற்று. ஒருவன் பிராயோ
பவேசம் செய்தான் எத்தனையோ ? அத்தனை நாள்களுக்கும், நாளொ
ன்றுக்கு ஒருயாகபலன் அவனுக்கு உண்டாகும். மகாரோகங்களால
வருத்தப்பட்டு இனிஉயிர்வாழ்க்கை வேண்டுவதில்லையென்றுபிரா
யோபவேசம் செய்துளமுடன் தியானித்து மரிக்கின்றவனும், நல்
லுலகே யடைவன். மரிப்பதற்குப் பிராயோபவேசம் செய்து நடு
வில் எழுந்து இல்வாழ்க்கையை விரும்புவானேல், அவன் பிராம
ணர் மூலமாய்ப் பிராயச்சித்தங்கள் செய்துகொண்டு பின்பு தரும
மார்க்கத்திலே ஒழுகுதல் வேண்டும். சந்நியாசம் செய்துகொண்டு
நியமத்தோடிருந்து மரித்தவனுக்கு அவன் அவ்வாச்சிரமம் பெற்ற
நாள்முதல் மரித்த தினமளவிலுமுள்ள நாள்களுக்கு நாளொன்று
க்கு இரண்டு யாகபலன் உண்டாகும். பிணியால் துன்பப்பட்டு மர
ணகாலம் அடுத்ததென்று எண்ணிச் சந்நியாசாச்சிரமம் பெற்றுப்
பின்பு பிணிநீங்கிப் பிழைத்து இல்வாழ்க்கையில் உடம்படுவானேல்
அவன் மகாரோகன் ஆவான். அவனிலும் பாவிபொருவனும்
இலன். அவனை பொருநர் பார்க்கலுமாகாது. மனை மனைவி மக்கள்
முதலியோரை நெடுங்காலம் பிரிந்து, நெடுந்தூரஞ்சென்று தீர்த்தயா
த்திரை செய்கின்றவனுக்குப் பிரமாதிதேவரெல்லாரும் வேண்டிய
வற்றைக் கொடுக்கின்றனர், தீர்த்தயாத்திரையை உத்தேசித்து
ச்சென்று விதியால் வழியில் மரிப்பானேல், அவன் சுவர்க்கம்புகுவன்.
சந்நியாசிகளையும், யாத்திரை செய்வோர்களையும், தேவரெல்லாரும்
காப்பாற்றுகின்றனர். விசேஷமாய் விஷ்ணுகணங்களே அவர்களை
ரக்ஷிக்கின்றார்கள். மரிக்கவேண்டுமென்றே புண்ணிய க்ஷேத்திரத்
தில் நெடுங்காலம் வசித்துச் சிறிது தினம்போல், வேறிடத்தில் மரிப்
பனேல், அவன் மறுசன்மத்தில் காவேரி தீரத்தில் வைதிக பிராமண
குலத்தில் சர்வசாஸ்திர சம்பன்னனாய் நல்லொழுக்க முடையவனாய்
பகவத் பாகவத ஆசாரிய பக்தியுடையவனாய்ப் பிறந்து, இறுதியில்
நல்லுலகடைவன். இன்னக்ஷேத்திரம்போய் அதிலே மரிப்பேன் என்
றும், அதில் மரிக்காமல் மீளேனென்றும், அங்கனா நாவின் நான்
மறைமுற்றிய அந்தணர் சந்நிதியில் சங்கற்பம் செய்து கொண்டு

சென்றவன் மீண்டும் மனைக்கண் வருவானேல், அவன் மகாபாபி ஆவன். அவனும் பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும். மரண காலம் அணித்தாயது என்பதை யறிந்து விஷ்ணு க்ஷேத்திரங்களில் மரிக்கவேண்டு மென்று யாவன் நடக்கின்றானோ! அவன் நடக்கும் அடிகளுக் கெல்லாம், அடியொன்றுக்கு ஒரு கோதானபலனை அடைவன். எக்காரணத்தி னாலேனும், அங்ஙனம் சென்றவன் திரும்பிவருவானேல் அவன் நடந்த அடிகளுக்கு அடி யொன்றுக்கு ஒரு கோவைக்கொன்ற தோஷம் அடைவன். கிருகத்தில் ஒருவன் செய்கின்றபாபங்கள் திவ்விய தேசங்களில் பகவத் பாகவதசேவையகலும், தீர்த்தப் பிரசாதங்களாலும் நிவர்த்தியாகும் க்ஷேத்திரங்களில் செய்யும் பாபம் எவற்றாலும், எந்நாளும் நிவர்த்தியாகா.

கருடா! அந்நியனுக்கு உதவி புரிதலினும் தனது தாய்தந்தையருக்கும் உடன் பிறந்தாளுக்கும், உடன் பிறந்தானுக்கும் வேண்டியவற்றைக் கொடுத்தல் விசேடமாம். புத்திரன் தந்தைக்குப் பொருள் முதலியவை கொடுத்தால் உத்தம பிராமணனுக்குக் கொடுத்ததால் உளதாகும் புண்ணியத்தினும் நூறுபங்கு அதிகம் புண்ணியம் பெறுவன். தாய்க்குக் கொடுத்தால் ஆயிரம்பங்கு அதிகம்பெறுவன். சகோதரிக்குக் கொடுத்தால் லட்சம்பங்கு அதிகம் எய்துவன். சகோதரனுக்குக் கொடுத்தால் புண்ணியத்துக்குக் கணக்கே யில்லை. வருந்தித்தான் பெற்றபொருளை நல்ல விநியோகம் செய்தல் வேண்டும். யாவன் இறத்தலை மறந்து, நிலையில்லாத சரீரத்தைப் போஷித்து, ஆடையாபரணங்களால் அதனை யலங்கரித்துச் சமுசாரசாகரத்திலேயே முழுகுகின்றானோ! அவனைப்பார்த்து இச்சீவன் திறன் இங்ஙனமோ மானிடசன்மம் பெற்றும், கருமத்தால இவன் நமது கைப்படுவானோ யானென்று யமன் சிரிக்கின்றான். ஒருத்தி பரபுருஷனைச் சேர்ந்து பெற்ற மகவை அவள் ஆமுடையான் எடுத்து மடியில் வைத்துக் கொஞ்சிக் குலாவும்போது, இக்குழந்தையை இவனோ பெற்றான் நம்மைப் புணர்ந்து பெற்றவன் வேறொருவனா யிருக்க, அதை யுணராமல், இவன் தான் பெற்றான் போலவும் தனக்குரியது போலவும் கொண்டாடுகின்றானே என்று நினைந்துக் கணவன் குழந்தையோடு குலாவுதலைக்கண்டு மகிழ்வாளோ என்னுமாறு இகழ்பிது

கி நகைபுரியும் கள்ளமாதுபோல பூதேவியாயவள் அளவற்ற நிலனையும், கொள்ளக்குறையா நிதியையும் அடைந்தும் தான் உடாதும் உண்ணுதும், பிறர்க்குச் சொடாதும் பொருளீட்டி வைக்கும் முழுமகனைப்பார்த்து இவனுக்கே யாருரிமையோ? அஃதுணராது எனது எனது என்கின்றனே என்று வாயாரச்சிரிப்பாள். பூமியும் மற்ற பொருளும் ஒருவனுக்கே உரியவோ? மமது நமது என்று பிதற்றித் திரிந்தோர் எல்லாரும் இறுதியில் நீத்தேகினரோ என்று நல்லாற்றில் ஒழுகி உயிர்களுக்கு உதவிசெய்து பூதானம் செய்கின்றவனைப் புவிமகள் நம்மாளுடையான் நல்லன். ஆயினும் நாம் சத்பிராமணன் கையில் கொடுக்கப் பட்டோமேயென்று உவக்கின்றாள். பூதானம் செய்தவனும் புனல் மூழ்கியேனும் பஞ்சாக்கினி மத்தியி லிருந்தேனும் தவஞ்செய்தவனும், மகங்கள் புரிந்தவனும் யுத்தத்தில் பின்வாங்காமல் முன்னின்றவனும் இகத்திலும் பரத்திலும் உயர்வு பெறுவனென்றருளினன்.



இருபத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.



## இருபத்தைந்தாம் அத்தியாயம்.



சூதமகாமுனிவர் நைமிசாரணிய வாசிகளே! கருட பகவான் ஆதிமத்தியாந்த ரகிதனாகிய ஸ்ரீமந் நாராயணனைத் தொழுது, சகதீசா! நித்தியசிராத்தம் யாங்ஙனம் புரியத்தக்கது? கவின்கருணாவெனலும் அறவாழி யந்தணன் புள்ளரசனை நோக்கிக் கூறுவான்! நாள்தோறும் ஒருசத்பிராமணரை வருவித்துப் போசனஞ்செய்வித்து அன்னமும் புனலும் ஒருகடத்தில் நிறைத்து அதனை யவ்வேதியனுக்கு கொடுத்தல்வேண்டும். இந்த நித்திய சிராத்தத்தால் மாய்ந்த சீவன் இன்பமடைகின்றனன். அச்சிவனை ஒருவருஞ்செய்யாவிடினும் வழியில்

நடத்திக்கொண்டு யமலோகம்சாரும் தூதரும் அச்சிராத்தத்தால்திருப்தி யடைந்து அச்சீவனுக்கு இதம்செய்கின்றனர். இறந்த பன்னிரண்டாநாள் சங்கற்பப் பூர்வமாய்ப் பன்னிரண்டு கடங்கள் தானம் செய்தல்வேண்டும். தரித்திரனாயினும் ஸ்ரீ விஷ்ணுபகவானைக் குறித்துப் பெரிதாய் ஒரு கடமும், தருமராசனைக் குறித்து ஒருகடமும் சித்திரகுப்தனைக் குறித்து ஒருகடமும் கொடுத்தல் வேண்டுமென்றருளினன், கருடபகவான் பரமாத்துமனைவணங்கிப, பரமபதநாதா! மோக்ஷமும்சுவர்க்கமும் எந்தக்ஷேத்திரங்களில் மரித்தால் கிடைக்கும்? அவ்விரண்டும் எக்கருமங்களைச்செய்தால் கிடைக்கும்? புகன்றருளுகவெனலும் ஸ்ரீவைகுண்டநாதன் வைனதேயா அயோத்தியா மதுரா மாயா * காசி காஞ்சி அவந்திகா, துவாரகா என்ற சப்த புரிகளில் எதிலேனும் ஒன்றில் தங்குவோன் நிரதிசய இன்பவீடாகிய நம்முலகு எய்துகின்றனன். சந்நியாசியாச்சிரமம்பெற்று மரிக்கின்றவனும், ஸ்ரீ விஷ்ணுபக்திசெய்து மரிக்கின்றவனும் ஸ்ரீராமகிருஷ்ணாதி நாமங்களைப் புகன்றவாறே இறக்கின்றவனும் சாளக்கிராமம் இருக்குமிடத்தில தங்குகின்றவனும் இன்பவீடடைகின்றனர். திருத்துழாய் வைத்து விருத்தி செய்கின்ற வனும், அதற்குப் புனல் பாய்ச்சுகின்றவனும், பாபம்நீங்கிநலவுலகடைகின்றனர். கோவுக்கும், பிராமணனுக்கும், குழந்தைகட்கும், ஆபத்துவந்தகாலை தன்னுயிரை விட்டாயினும், அவற்றை யாவன் ரக்ஷிக்கின்றனனோ? அவன் இறுதியில தேவரெல்லாரும் எதிர்கொள்ளச் சுவர்க்கம் சேர்கின்றான். ஸ்ரீரங்கத்திலேனும் காசியிலேனும் குருக்ஷேத்திரத்திலேனும்பிருகுக்ஷேத்திரத்திலேனும், பிரபாச தீர்த்தத்திலேனும், ஸ்ரீ காஞ்சியிலேனும், திரிபுஷ்கரத்திலேனும், பூதேசுவரத்திலேனும், மாண்டவன் வீட்டுலகெய்துகின்றனன். ஏழு அல்லது எட்டு வயதுள்ள கன்னிகையை மணம் புரிந்தவனும், வேத சாஸ்திரங்

* காசி—இப்போது சிவக்ஷேத்திரம் ஆதியில் விஷ்ணுக்ஷேத்திரம், சிவன் பிரமகத்தி தோஷத்தால் பீடிக்கப்பட்டு புவியெங்கும் திரிந்து காசிக்ஷேத்திரம்வர, உடனே அம்மகாபாதகம்நீங்க அச்சிவன் அப்போது அந்தக்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீயப்பதியைத் திருவடிதொழுது கைலைமலை சேர்வான் அகல மீண்டும்

அப்பாதகம்வந்து பற்ற கபாலி திரும்பிக் காசியினுட் புகுந்து உலகையுண்டுமிழ்ந்த ஒருவனை வணங்கி உற்றவா றுரைத்துச் சுருதி மூர்த்தி ! நீ எழுந்தருளி யிராநின்ற இந்த க்ஷேத்திரத்தை அடியேனுக்குத் தந்தருள்வையேல் மகாபாதகத்தாலே பிடிக்கப்படாமல் இங்கணிருப்பே னென்று பிரார்த்திக்க; பரமகாருணிக னாகிய பகவான் காசியை அரனுக்குக்கொடுத்துப்பிரயாகையில் எழுந்தருளின னென்று நாரதிய புராணம்கிலாகின்றது. பின்புசிலர்சிவனைக் குறித்துத்தவம்புரிந்துமுத்திவேண்ட அச்சங்கரன்பிரமனைநோக்கி எந்தையே! அடியேன்முத்திகொடுக்குந்தெய்வமென் றெண்ணி அடியேனைச்சிலர் முத்திகேட்கின்றனர் அவர்களுக்கு நான் முத்திகொடுக்க ஒருபாயம் அருளுதியென்று பிரார்த்திக்கச் சதுர்முகன் சம்புவைநோக்கி இராமநாமத்தையோதிக் காசியில் இறப்போர்க்கு முத்திகொடுவென்று அருள, அரன் அதுமுதல் அங்ஙனம் முத்திகொடுக்கின்றனனென்று அகத்திய இராம அரசங்கிதை கூறுகின்றது.

---

களையுணர்ந்தவனும் கன்னிகையேனும் பூமியேனும் கிருகமேனும்-கோவேனும் - நிலப்பருவதமேனும், யானையேனும் தானங் கொடுத்தவனும்சுவர்க்கம் எய்துவர். கிணற்றையும் நடைவாவியையும், குளத்தையும், தேவாலயத்தையும்புதுக்கினவன் முன்னமே அவற்றை யுண்டாக்கினவனினும் அதிகம் புண்ணியமடைந்து விண்ணுலகு சார்வன். குசைப்புல்லாலேனும் வீடுகட்டித் தானம் செய்தவன் மூன்றரைக் கோடிவருடம் சுவர்க்க வாசம் செய்வன். பிராமணருக்கு வருஷாசனம்கொடுப்பவனும், சுவர்க்கம் எய்துவன் என்றருளினன்.



## இருபத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்



வு-ஹும்,கரும்ம் செய்யத்தக்கது. கங்காதீரத்திலேனும் யமுனாதீரத்திலேனும், நைமிச வனத்திலேனும், புஷ்கர க்ஷேத்திரத்திலேனும், குளக்கரையிலேனும், அரசமரத்து நிழலிலேனும், பசுமாட்டுக்கொட்டிலிலேனும், இல்லத்திலேனும், நாராயணபலி செய்தல் வேண்டும். வேத மந்திரங்களாலே ஸ்ரீ விஷ்ணு பகவானை யாராதித்து ஸ்தோத்திரம் செய்து தெற்குமுகமா யிருந்துகொண்டு சங்குசக்ர பீதாம்பர தாரியாயும், நித்தியனும் சர்வாந்தர் யாமியாயும், திவ்விய மங்கள விக்கிரக அனந்த கல்யாணகுண ஸ்வரூபனாகியும், இராநின்ற ஸ்வாமி! மரித்தவனுக்கு நற்கதி கொடுத்தல்வேண்டுமென்று அப்பகவானைப் பிரார்த்தித்துத் தியானித்துப் பக்தி பூர்வமாய்ப் பிராமணருக்குப் போசனம்செய்வித்துத் தானியதானம் கொடுத்துப் பிண்ட தருப்பண முதலிய யாவும்புரிதல்வேண்டும். அங்ஙனம் புரிந்ததினத்துக்கு மறுதினத்தில் சுவர்ணத்தினால் ஸ்ரீவிஷ்ணு பிரதிமையொன்றும், தாமிரத்தினால் உருத்திரப் பிரதிமையொன்றும், வெள்ளியினால் பிரமப்பிரதிமை யொன்றும், இரும்பினால் யமப்பிரதிமை யொன்றும் செய்து மேற்கில் ஸ்ரீவிஷ்ணுவையும், கிழக்கில் பிரமனையும், தெக்கில் யமனையும் வடக்கில் உருத்திரனையும் மத்தியில் மரித்தவனையும் வைத்துப் பூசித்து ஐந்து கும்பங்கள் வைத்து அவற்றில் நவரத்தினங்கள் பெய்து பூணூல்சார்த்தி அலங்கரித்து மேற்கூறிய ஐந்து தேவர்களைக் குறித்துச் சிராத்தம்செய்து பிண்டம்வைத்து, எட்டுத்தானங்களும் செய்து செம்புப் பாத்திரத்தில் திலமும் இரணியமும் வைத்துத் தானம்கொடுத்து இருக்குவேதமுணர்ந்தவனுக்குப் பயிருடன் பூதானமும் எசுர் வேதமோதுபவருக்குக் கன்றுடன் ஆவும், சாமவேதம் வல்லவருக் குச் சப்பாணியும் கொடுத்தல்வேண்டும். முந்நூற்றறுபது பலாசஇலை காம்பினால் மரித்தவனது சரீரம்போல ஒன்று செய்தல்வேண்டும்.

கருடா! முந்நூற்றறுபது காம்புகளுக்கும் விவரம் சொல்லுகின்றேம். சிரசுக்கு நாற்பதும், கழுத்துக்குப் பத்தும், மார்புக்கு இருபதும், வயிற்றுக்கு இருபதும், இரண்டுகைக்கு நூறும்,இடைக்கு இருபதும் தொடைகளுக்கு நூறும், முழந்தாள்களுக்கு முப்பதும் ஆண்குறிக்கு நாலும் விருஷணங்களுக்கு ஆறும், கால்களு

க்குப் பத்தும் வைத்து, மீண்டும் சிரசுக்குத் தேங்காயும், முகத்துக்குப் பஞ்சரத்நமும், நாவுக்கு வாழைப்பழமும், மூக்கிற்கு எட்பூவும், காதுக்கு எள்ளும், நரம்புக்குத் தாமரைத்தண்டும், தசைக்கு அன்னமும், இரத்தத்துக்குத் தேனும், மயிர்களுக்குச் சவரியும், தோலுக்குக்கிருஷ்ணாஜினமும், ஸ்தனப்பிரதேசத்துக்குக் குய்றியும், நாபிக்குத் தாமரைப்பூவும், விருஷணத்திற்குப் பனங்காயும், வைத்துச் சந்தன புஷ்பங்களால் அலங்கரித்துச் சாஸ்திரப்படி கிருத்தியம் செய்தல்வேண்டும். இங்ஙனம் செய்யின் துன்மரணமடைந்தவன் நற்கதி யடைவான். இவ்விதம் கருமஞ்செய்யும் புத்திரனுக்குப் பத்துதினமும் மற்ற தாயத்தார்களுக்கு மூன்றுதினமும் ஆசௌசம் உளது என்றருளிப் பின்னும ருளுகின்றான்.

—:(*):—

இருபத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

—(*)—

# இருபத்தெட்டாம் அத்தியாயம்.

—(*)—

சூதமாமுனிவர், மறந்தும் புறந்தொழாத திருமாலடியார்களாகிய நைமிசாரணிய வாசிகளே! பின்னர்ச் சர்வஜ்ஞன், எம்மையாளுடைய பிரானைநோக்கி, வைனதேயா! விருஷோற்சர்க்கத்தைக் குறித்து வேறொருபிரகாரம் சொல்லுகின்றும் கேண்மோ? முன்னமேசொன்னதினங்களில் ஒன்றில் ஸ்தலசுத்தி செய்தபின்னர் அக்கினிப்பிரதிஷ்டைசெய்து ஒரே வருணமுடைய காளைக்கன்று ஒன்றும் அதற்குச்சிறிதாய்க் கடாரிக்கன்று ஒன்றும், கொணர்ந்து அவ்விரண்டனையும் மஞ்சனமாட்டி வஸ்திரா பரணங்களால் அலங்கரித்து வாலில் தருப்பணஞ்செய்து விஷ்ணுசாந்நித்தியம் 

பொங்கும் சங்கராந்தி புண்ணியகாலத்தில் தான தருமங்கள் செய்யின் அவற்றை ஆதித்தன் அளவில்லாமல் விருத்திசெய்கின்றான். இருபிறப்பாளருக்குரிய அறு தொழில்களுள், ஓதுவித்தலும், யாகஞ்செய் வித்தலும், தானம் ஏற்றலும் ஆகிய முத்தொழில்களில் தானம் வாங்கலாலே அதிக தோஷமிலது. வாங்குதலாலுளதாகும் பாபம் ஸ்நான ஜபங்களால் நிவர்த்தியாகும். மற்ற இரண்டால் வரும் பாபம் நிவர்த்தி யடைதல் அரிதாகும். ஒழுக்கத்தினின்று நீங்காமலும், பரான்னம் புசியாமலும், உள்ள பிராமணன் கடல் புடைசூழ்ந்த புவிமுழுதும் தானம்வாங்கினும், அவன் தோஷத்திற் குட்படாமல் தானம் கொடுத்தவனுக்கும்விசேட பலனையும் உண்டாக்குவான் என்றருளிப் பின்னுங் கூறுகின்றனன்.

—:(*):—

இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

—(*)—

# முப்பதாம் அத்தியாயம்.

—:(*):—

சூத புராணிகர், துவாத சோர்த்துவ புண்டரந் தரித்த திருமேனியை யுடைய பரம வைதிகர்களே? வாசுதேவன் விநதை புத்திரனை நோக்கி, விஹாபகா! நான்கு வயதுக்குமேல் பன்னிரண்டு வயதுவரையில் குழந்தைகள் செய்யும் பாபம், தாய் தந்தையரைச்சாரும். தாய் தந்தையரிலராயின் அக்குழந்தைகளை ரட்சிக்கின்றவர்களைச் சாரும். அப்பாபத்துக்காக அவர்கள் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும். குழந்தைகளுக்குப் பாபமில்லை. குழந்தைகளை அரசன் தண்டிக்கலாகாது. அதுநிற்க பிணியால் பீடிக்கப்பட்டு ஸ்நானம் செய்யக்கூடாமலிருக்கின்றவனுக்கு ஆசௌசம் நேர்ந்தால் ஆசௌசமில்லாதொருவன் பத்தாவர்த்தி ஸ்நானஞ்செய்து ஓராவர்த்தி அவனைத்தீண்டி மீண்டும் அவ்விதம் பத்துஸ்நானம் பத்தாவர்த்தி

செய்து, பக்தாவர்த்தி யிண்டொறையில் அவன் சுத்தனாகின்றான். பகவான் இலனென்று கூறுகின்றவன் யாவனோ? அவன் மகாபாபியாவன். அவனுக்கும், துர்மரணமடைந்தவனுக்கும் உத்தரகிரியை செய்ய வேண்டுவதில்லை, அங்ஙனம் இறந்தவன் யாகஞ்செய்தவனாயின் அக்கினியைய நீரிலும், ஔபாசனத்தை நாற்சந்தியிலும், பாத்திரங்களை நெருப்பிலும் எறிதல்வேண்டும் பின்பு வருடம் முடிகின்றகாலத்தில் தனயுடைய புத்திரன் சுக்கிலபட்சம் ஏகாதசியில் ஸ்ரீ விஷ்ணுவையும் யமனையும் ஆராதித்து மரித்தவனைக் குறித்துப் பத்துப் பிண்டங்கள் போட்டு; அவற்றை எடுத்துக்கொண்டு சென்று புனலிற்போட்டு, தெற்கு முகமாயின்று மரித்தவன் பெயரை மூன்றுவர்த்தி நினைந்து சொல்லாநின்று நீராடி, இவ்வண்ணமுபவாசமிருந்து மறுதினம் வேதசாஸ்திரமோதிய ஏழு அல்லது ஐந்து பிராமணர்களை வரித்து மத்தியானத்தில் வடக்குமுகமாய் அவர்களை ஆசனத்தில் இருத்தி ஆராதித்துப் பீதகவாடைப் பிரானைப் பூசித்து அப்பிராமணர்களுக்குப் போசனம் செய்வித்து, ஸ்ரீ விஷ்ணுவுக்கும், பிரமனுக்கும் உருத்திரனுக்கும், தூதர்களுடன் யமனுக்கும், மரித்தவனுக்கும் கிரமமாய் ஐந்து பிண்டம் வைத்துத் தந்தையவனுடைய பெயரையும் கோத்திரத்தையும் சொல்லி, ஸ்ரீவிஷ்ணுநாமங்களை யுச்சரித்து, மாய்ந்தவன் பிரேதரூபமொழியாமல், அவனது ஐந்தாம் பிண்டத்தை யெடுத்தகற்றிப் பின்பு தண்டம் சமர்ப்பித்துத் தானங்கள்கொடுத்து மற்றோர் பிராமணர்களில் மரித்தவனது ஸ்தானத்தி லிருக்கின்றவனுக்கு அறுசுவை யுணவைக் கொடுத்துப் பாவான் திருப்தியடைந்து கடாக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து, அந்தணர்களைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து பின்பு தெற்குமுகமாய் இருந்து தருப்பணம் செய்தல் வேண்டும். இன்னும் விசேஷமாய்ச் செய்யவேண்டுமென்று புத்திரனுக்கு மனமிருந்தால் சுவர்ணத்தினால் சர்ப்பஞ்செய்து சாஸ்திரத்தில் சொல்லியபடி யாவும் செய்யலாம் என்றருளி வருடசிராத்தம் செய்யவேண்டியவிதி கூறியருளுவான்.

## முப்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

(*)

## முப்பத்தொன்றாம் அத்தியாயம்.

(*)

சூதர், திருமாலடியார்களே! சாட்குண்ணிய பரமன் பட்சிராஜனைப்பார்த்துக் காசியபதனயா! புத்திரன் முதலியோர் தாய் தந்தையர் முதலியோரைக் குறித்து வருடந்தோறும் சிராத்தம் செய்

தல் வேண்டும். தந்தை தன் புத்திரனுக்கும், தமயன் தனது தம்பிக்கும், சிராத்தம் செய்யும்படி நேரிட்டால் தலைமுறையி லுள்ளோரைக் குறிக்காமல் இறந்தவனைக்குறித்து மாத்திரம் செய்தல் வேண்டும். புத்திரன் தாய்தந்தையருக்குச் செய்வானாயின் மூன்று தலைமுறையைக் குறித்தே செய்தல்வேண்டும். ஆசௌசம், விருத்தி முதலியவை நேரிட்டால், அவை நீங்கியதினத்தில் சிராத்தம் செய்தல் வேண்டும். மரித்தவனுக்குக் கிருத்தியம் செய்யும்போதே சபிண்டீகரணம் செய்யாமல், மாசிகமாத்திரம் செய்து வரும்போது. ஆசௌசம் நேர்ந்து மாசிகம் நிறுத்தப்பட்டால் அம்மாசிகத்தை மறுமாசிகத்தோடு சேர்த்துச் செய்தல் வேண்டும். சபிண்டீகரணம்செய்து மாசிகம் செய்யப்பட்டு வந்தால், ஆசௌசத்தால் நின்றமாசிகத்தை அவ்வாசௌசம் நீங்கிய தினத்திலே செய்யலாம். [illegible] புத்திரன் சிராத்தம் செய்யும்படி நேரிட்டால சங்கற்ப விதானமாய்ச் செய்தல்வேண்டும். ஒரேகாலத்தில் தேசாந்திரத்தில் பலர் துஞ்சினரென்று கேள்வியுற்றால், யாவன் இறந்தானென்று முன்பு கேட்டானோ அவனுக்கு முன்பும், மற்றவருக்குப் பின்பும் கிரியைசெய்தல் வேண்டும். மரித்ததினம் தெரியாமல் செத்தாரென்றுமாத்திரம் கேள்விப்பட்டால் அமாவாசையில் சருமம்செய்தல் வேண்டும். தினம்தெரிந்து மாதம் தெரியாவிட்டால். ஆடி,புரட்டாசி,மார்கழி. மாசி இந்த மாதங்களில் கிருஷ்ணபக்ஷத்தில் அஷ்டமியிலேனும், அமாவாசையிலேனும்செய்யலாம். தேசாந்திரத்தில் ஒருவன் இறந்த தினமாவது, மாசமாவது தெரியாவிடின் யாத்திரைக்கு அவன் புறப்பட்டதிதியில் செய்தல் வேண்டும். ஒரு குடும்பத்துக்குத் தலைவன் அவனைச் சேர்ந்த சிலரோடு தேசாந்தரம் சென்றகாலை அவரில ஒருவன் மரித்து. அத்தலைவன் ஆங்கு ஆசௌசம் அநுஷ்டித்துப் பின்பு மனைக்குவருவானேல், அந்தகாலத்தில வீட்டிலிருந்த அவன்புத்திரன் வேறொருவருக்குச் சிராத்தம் செய்துகொண்டிருந்தால் வந்ததலைவன் சிராத்தஞ்செய்து முடியும்வரையிலும். தூரத்திலிருந்து பின்பு வருதல் வேண்டும். சிராத்தத்துக்கு வரிக்கப்பட்ட பிராமணன் மேற்சொன்ன சமாசாரத்தை முன்னமே யுணர்ந்து சிராத்தம் செய்கின்ற புத்திரனுக்கு அதனைச்சொல்லாமல், சிராத்தத்தில் சாப்பிட்டால் தோஷம் அப்பிராமணன் கைபதாகும். தாய் தந்தையர் இறந்த திதியை மறந்துவிட்டால் அஷ்டமியிலேனும், ஏகாதசியிலேனும், அமாவாசையிலேனும் செய்தல்வேண்டும். செய்யாமல்விடலாகாது. சிராத்தம் செய்யாமல் விடுகின்றவன் யாவனோ? அவனே சண்டாளன். ஒருவன் மரிக்கும் காலம்வரையிலும், நாள்தோறும் நித்திய சிராத்தம் செய்வானேல் அவனுக்கு மிக்க நலமுண்டாகும். இறந்தவனைக்குறித்தல்

லாமல் உயிரோடுள்ளவன் தன் க்ஷேமார்த்தமாய்ச்செய்யத்தக்கதாகிய இந்த நித்தியசிராத்தத்துக்கு விதியொன்று மிலது. ஆவாகனமுமிலது. சாப்பிடுகின்ற பிராமணனுக்கும் யாதொரு நிர்ப்பந்த விதியுமிலது. தினந்தோறும் ஒருபிராமணனுக்குப் போசனஞ்செய்வித்தல் மாத்திரமே என்றருளி, ஏ கருடா! நீ வினவிய வற்றிற் கெல்லாம் விடைதந்தோம். இனியேதேனும் வினவுவாயேல் செப்புகின்றோம் என்று பகர்ந்தருளினன்.

## முப்பத்தொன்றும் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

(*)

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்.

ஸ்ரீ வியாசர்மாணாக்கர் பகவத்திருவாராதன பரர்களே! கருட பகவான் வாசுதேவனைத் தொழுது சுவாமி! உலகில தோன்றுகின்ற சீவரில் இந்தச் சீவன் பூர்வசன்மத்தில் இன்னபாபஞ் செய்தவன் இந்தச் சீவன் இன்ன புண்ணியஞ் செய்தவன் என்று பகுத்தறியலாகுமா? பாபஞ் செய்தவனைத் தண்டிப்பார் யமனன்றி வேறொருவருமிலரோ பகர்ந்தருள்க வென்னலும், பக்தவத்சலன், காசியபதனயா! இந்தச் சீவன் இன்னபாபஞ் செய்தவனென்று நன்கு அறியலாகும். சிஷ்டன் தவறிப் பாபஞ்செய்வனேல், அவனை அவனுடைய ஆசாரியன் சிட்சிக்கின்றனன். துஷ்டன் ஆசாரியன் ஆணையினும், அடங்காதிருத்தலால் அவனை அரசன் தண்டிக்கின்றனன். சிஷ்டனாயினும், துஷ்டனாயினும் யாரும் உணராவண்ணம், பாபஞ்செய்யின் யமன் நன்கு தண்டிக்கின்றனன். பாபஞ் செய்தவன் அப்பாப நிவர்த்தியின் பொருட்டுப் பிராயச்சித்தஞ் செய்யாமல் மரிப்பனேல், அவன் யமலோகத்தில் நெடுங்காலம் நரகவாசஞ்செய்து, நாய் நரி முதலாகிய இழிந்த சன்ம மடைந்து பின்பு மானிடசன்மம்பெற்று முன்பு சன்மத்தில் செய்தபாபத்தை யாவரும் அறியத்தக்க குறியுடையோனாவன். வார்த்தை சொல்லவொண்ணாமல் நெஞ்சடைப் புடையானைப் பூர்வசன்மத்தில் பொய்சொல்லி நரகவாசஞ் செய்தவனென்றும், ஊமையானைச் சுரபிவிஷயத்தில் இழுதை நீகழ்த்தினவனென்றும்; பிறன் இல்லாளைக் கொணர்ந்தவனென்றும், குஷ்டரோகியைப் பிரமகத்தி செய்தவனென்றும புழுக்குற்ற பல்லுடையானை மத்தியபானஞ் செய்தவனென்றும், புழுக்குற்றநகம் அடைந்தவனைச் சுவர்ணம் திருடினவனென்றும், விகாரமுள்ள மேனியுடையானைக் குருஸ்திரீகமனஞ் செய்தவனென்றும், சண்டாள சன்மமடைந்தவனைத் தன்

ணையன் ஜநகதியு மில்லாதவனாகின்றான்; வாசனை பொருளைத் திருடினவன் துர்நாற்றமுடைய சரீரமடைகின்றான். பிறனுடைய எப்பொருளையேனும் கவர்ந்தவன் புழு முதலிய இழிசன்மமடைகின்றான். யமபுரிக்குச் செல்லும் மார்க்கத்தில் தீயாலும், அரத்தத்தாலும் பல்வகை மிருகங்களாலும், முதலைகளாலும், கீடங்களாலும், நிறைந்த வைதரணியென்ற ஒரு நதியுளதென்றோமே! அந்நதியில் உருக்கிய நெய்போல ஜலநீர் பெருகாநின்றது. மகாபாபங்களைச் செய்தவர்களுக்கெல்லாம் அந்நதி ஸ்நானமாயிராநின்றது. மற்றும் நம்மையொப்பவனும் ஒருவனுளனோவென்று செருக்குற்றவனும், தாய் தந்தையரையும், குருவையும், புரோகிதரையும் அவமதித்தவனும் தன்னை நேசித்தவனுக்கும், தனக்குச் சேவகம் செய்வித்தவனுக்கும், ஸ்திரீகளுக்கும், குழந்தைகளுக்கும் கண் முதலிய இந்திரியங்களுக்குறைவுள்ளவருக்கும் தீங்கு செய்தவனும், விவாகவிஷயத்திலும் பிராமணவிஷயத்திலும், தான விஷயத்திலும், தரும விஷயத்திலும், இடறுபுரிந்தவனும், பிராமணருக்கு ஏதேனும் ஒன்று தருகின்றேனென்று சொல்லி, இன்று நாளையென்று அலைவித்தவனும், புரோகிதன் மனைவியைப் புணர்ந்தவனும், ஸ்ரீமத்ராமாயண பாரத புராணங்கள் படிக்குமிடத்தில் வீண்வார்த்தை பேசினவனும், மரணம் புரியுங்காலை சன்னிதிகளுக்குத் தோஷம் கற்பித்தவனும், பசு முதலிய மிருகங்களுக்குச் சமமாய்த் தீர்த்தம் கொடாமல் தனக்குரியவற்றிற்கு, மிகுதியாயும் பிறனுக் குரியவற்றிற்குக் குறைவாயும் கொடுத்தவனும், ஒரு பொருளை யொருவனுக்குக் கொடுத்து, கொடுத்தோமேயென்று பின்பு துக்கித்தவனும், பிராமணனுக் குரிய கருமாநுஷ்டானங்களைச் செய்த சூத்திரனும், கருமாநுஷ்டானங்களை விட்டுப் புலாலுண்ட பிராமணனும், பசுவாணிபன் என்றவனும் எப்போதும் பிறரை முனிந்தவனும், பிறன்பழி கூறினவனும், அந்நதியிலேயே முழுகி மிருகங்களாலும், முதலைகளாலும், கீடங்களாலும், துன்பப்படுவர்.

தார்க்ஷியா! தீவினைசெய்யாமல் நல்வினைசெய்த சீவன் இறந்துற்றபின்பு சுவர்க்கவாசம் செய்து நல்ல க்ஷேத்திரத்தில் உத்தம குலத்தில் சர்வசாஸ்திர சம்பன்னனைப் அறிவும் தனமுமுடையனாய்ப் பிறந்து வாழுவன். தந்தைமரித்தகாலை ஆசௌசம் நீங்குவதற்குள் புத்திரன் இப்புராணத்தைக் கேட்பனேல், அத்தந்தை பிரதிசய இன்பவீடாகிய நம்முலகு எய்துவன். தாய்மரித்தகாலை கேட்பனேல் அத்தாய் புநர்சன்மமடைந்து சுவர்க்கம் சார்வாள். பிதிராக்களும் நற்கதியடைவார்கள் சங்கிராந்தியிலும், விஷுவென்னும் புண்ணிய தின

த்திலும், கிரகணத்திலும், சிராத்ததினத்திலும், இப்புராணத்தைப் படிப்போரும், கேட்போரும், படிப்பிப்போரும், இறுதியில் நல்லுலகு சேர்வர். அவர்களுடைய பிதிரர்களும், உத்தமலோகமடைவார்கள். கோடி கன்னிகாதானம் செய்தலாலும், நூறு ஆவர்த்தி சோடசமகாதானம் செய்தலாலும், கயா சிராத்தம் செய்தலாலும், வரும் புண்ணியம் இப்புராணத்தைக் கேட்டலால் உளதாகும். சீவருக்கு யமலோக பயத்தை நிவர்த்திப்பதும், மோக்ஷமார்க்கத்தைத் தெரிவிப்பதும் ஆகிய இப்புராணம் உலக நன்மையின்பொருட்டு நினக்கு நம்மால் சொல்லப்பட்டதென்று பத்தராவி திருவாயமலர்ந்தருளினர், பின்னர்க் கருடபகவான் பரமகாருணியராகிய பகவானை வலம்வந்து திருவடியைத் தொழுது, வேதாவுக்கு வேதமோதியருளிய திருநாவால் சர்வேசன் புராணம் சொல்லிய நானப் பெற்றேனே, எத்தவம் புரிந்தேனோ? என மகிழ்வுற்றனன். சூதர் நைமிசாரணிய வாசிகளே! புராண சிரவணம் செய்ய விரும்பிய நுங்கட்கு அறிந்தவாறு சொன்னேனென்று கிளத்தி, ஸ்ரீ ஹரிநாமங்களைப் புகன்றிருந்தனர். அக்காலை புராண சிரவணம் செய்த சௌனகாதி மகருஷிகளெல்லாரும் ஆனந்தவேலையில் ஆழ்ந்து புராணிகனை நோக்கி, சூதமாமுனிவரே! அடியோங்களிடத்தில் கருணைசெய்து இப்புராணம் பகர்ந்தருளினீர். அநேக புராணங்கள் தேவர் முகமாய்க் கேட்டிருக்கின்றோம். சீவனுக்கு உறுதிகற்பிக்கும் புராணம் இதனினும் மற்றொன்றிலது. தேவருக்கு விசேஷமாய்ச் சமர்ப்பித்தல வேண்டுமென்ற எண்ணம் எங்கட்குத் திண்ணமாயுளது, நங்கள் நிலைமை தேவருக்குத் தெரியாததன்று. யாங்கள் எல்லாம் எளியேமாகவே யிருக்கின்றோம் என்று புகன்று கைந்நீர்-அடிநீர் உண்ணீர் - கொடுத்துப் போற்றினமா. அவருள் ஒருவர் பெருமையை புராணம் கேட்டலாகாதென்று புராணிகருக்கு ஒரு குடம்கொடுத்தனர். ஒருவர் மரவுரிகொடுத்தனர். ஒருவர் புலித்தோல்கொடுத்தனர், ஒருவர் பூணூல்கொடுத்தனர். ஒருவர் யானைக் கொடுக்கலாமென்று சற்றே ஆலோசித்துக் குசைப்புல் கொடுத்தனர். ஒருவர் சூதனைப்போலப் புராணம்சொல்லுவோர் திரிலோகத்திலும் உளரோவென்று வாயாரப் புகழ்ந்தனர். ஒருவர் பன்முறை தண்டஞ்சமர்ப்பித்தனர். பின்னர் யாவரும் புராணிகனை வலம்வந்து தண்டம் சமர்ப்பித்துத் தத்தம் ஆச்சிரமமேகினர்.

## முப்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ கருடபுராணவசனம் முற்றுப்பெற்றது.